

# காணிநிலம்

சொல் விளையும் பூமி

• ஜனவரி - மார்ச் 2018 • இதழ் : 1 • தனிச்சுற்றுக்கு மட்டும்

• கல்யாண்ஜி
• கலாப்ரியா
• ஜெயதேவன்
• எஸ்.சங்கரநாராயணன்
• தீன்
• ஷான்
• வ.தெ.சு.கவுதமன்
• இரா.நாறும்பூநாதன்
• சூரியதாஸ்
• ச.மகாதேவன்



# உள்ளே...

## சிறுகதை



## கட்டுரை



## கவிதை



## மொழிபெயர்ப்புக் கவிதை



## மேலும்...



அட்டை ஓவியம்: சண்முகம்





# காணிநிலம்

சொல் விளையும் பூமி

• ஜனவரி – மார்ச் 2018 • இதழ் : 1 • தனிச்சுற்றுக்கு மட்டும்




### தொடர்புக்கு:

ஆசிரியர் குழு
காணிநிலம் இலக்கிய இதழ்,
29, 'தமிழ் அகம்' வி.ஐ.பி. நகர்,
தியாகராஜ நகர்,
திருநெல்வேலி – 11,
அ.எண் – 627 011.
அலைபேசி எண் – 94421 12763.
kaaninilam2018@gmail.com



காணிநிலம்

நெல்லையில் வாழும் இலக்கியப் பற்று கொண்ட [பித்தென்றும் சொல்லலாம்] ஒத்த எண்ணம் கொண்ட பத்து நண்பர்கள் ஓரிடத்தில் கூடி கண்டெடுக்கப்பட்டது ஒரு 'காணிநிலம்' .

தை பிறந்தால் வழி மட்டுமல்ல, காணிநிலமும் பிறக்கும். இலக்கிய ஆர்வம் கொண்டோர் கையில் இதழ் தவழும் என்று முடிவெடுக்கப்பட்டு இலக்கியம் விளையும் காலாண்டிதழ் ஒன்று தயாராகி உங்கள் கைகளில் தவழ்கிறது.

காணிநிலம்தான், எனினும் இது... 'சொல் விளையும் பூமி'
இலக்கிய தாகம் கொண்டோருக்கு வற்றாத கேணி;
படைப்பாளுமைகள் பயணிக்கும் இலக்கியத் தோணி;
ஆர்வம் உடையோரை மேலேற்ற உதவும் ஏணி.

இருப்பிடம் நெல்லை எனினும் " காணிநிலம்" தமிழ் கூறும் நல்லுலகம் முழுமைக்கும் சொந்தமானதாகவே இருக்கும் .

இது வெறும் கூற்றல்ல ... என்ற " கனவு மெய்ப்பட வேண்டும் " என்ற ஆசையில் காணிநிலத்தைப் பண்படுத்தி பயிர் செய்யும் பணியில் .... உங்கள் அன்பையும் , ஆதரவையும் வேண்டி ...

– ஆசிரியர் குழு, காணிநிலம்.


| சந்தா விபரம் | | |
|---|---|---|
| | ஆண்டுச் சந்தா | ₹100/- |
| | ஈராண்டுச் சந்தா | ₹200/- |
| | ஐந்தாண்டிற்கு | ₹500/- |
| | ஆயுள் சந்தா | ₹1000/- |

வங்கி மூலம் பணம் செலுத்த:
A/C Name. Thanappan P.
A/C No. 119010100045727
IFSC CODE ANDB0001190
ANDHRABANK.

# அபரஞ்சி

● எம்.எம்.தீன்

கிரீச்சிடும் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைகையில் எதிரே ஓடி வந்து அவள் மீது ரெண்டு கால்களையும் போட்டபடி வாயைப் பிளந்தது ஜூலி. அவளை அழைத்துக் கொண்டு வெளியே செல்ல வேண்டுமாம். வெளியே ரேணுகா அம்மன் கோவிலை அடுத்து இருக்கிற அரசமரத்தை ஒரு சுற்று சுற்றி விட்டு அவள் காலைக்கடன் முடித்த பின்னே திருப்பி அழைத்து வரவேண்டும்.

“என்னடி நேரத்தோட வந்த மாரி இருக்கு. நீ பத்தரைக்குத்தான் வருவேன்னு பத்து தடவ சொல்லியிருப்பேன், அதுக்குள்ள அவுங்களால பொறுக்க முடியல. நல்ல வேள அபரஞ்சி.கொஞ்சம் நேரமா வந்துட்ட.”அய்யாக்கண்ணுவின் மனைவி உருக்கமாகச் சொல்லியது.

வேகமாக நடந்த அவளது பின்னால் வந்த ஜூலியைப் பார்த்து, “ஏடி, கொஞ்சம் இங்கன உக்காந்திரு. அய்யாவப் பாத்துட்டு உன்ன அழச்சிட்டு போறேன்” என்றதும் வாசலில் குந்தியமர்ந்து அவள் போவதைப் பார்த்தபடி இருந்தது.

அய்யாக்கண்ணு அய்யாவின் அறைக்குள் அவள் நுழையவும், அவர் கேட்டார். “ஏட்டி சிவாமி இன்னும் அபரஞ்சி வரலியா?”

”அய்யா... நான்தேன்” என்ற அவளின் குரலைக் கேட்டவுடன் வாம்மா என் மாராசி என்று சன்னக்குரலில் சொன்னார்.

காலில் சலநீர் கட்டுக்கு மேல் கசிந்தபடி இருந்தது. மெதுவாக கையுறைகளைப் போட்டுக் கொண்டு மெதுவாக பழைய கட்டைப் பிரித்தாள். இருகால்களிலும் தோல் நோய் ஏற்பட்டு சீழ் வடிந்தபடி இருந்தது. இரண்டு நாளானதால் அடர் துர்நாற்றம் அறையெங்கும் படிந்தது. பக்கத்தில் நின்றிருந்த சிவகாமியம்மாவுக்கு சகிக்க முடியவில்லை. அப்படியே. மூக்கைப் பொத்திக்கொண்டு நழுவப் பார்த்தது. அம்மா கொஞ்சம் பத்தி கொளுத்துங்க. அத்தோட கொஞ்சம் செண்டு அடியுங்க. என்றாள்.

சகிக்க முடியாமல் வெறுத்த மனத்தோடு பத்தியைக் கொளுத்தியது. அதற்குள் அபரஞ்சி புண்ணை டெட்டால் இட்டு கழுவி மருந்து போட்டுக் கொண்டிருந்தாள். அய்யாக்கண்ணு தன்கால்களையேப் பார்க்க விரும்பாது கண்ணைப் பொத்திக் கொண்டார். விட்டால் மூக்கையும் பொத்திக் கொண்டிருப்பார்தான். என்ன செய்வது அவரது சீழ் பிடித்த காலாயிற்றே என்று பொறுத்தபடியிருந்தார்.



கட்டுப் போடுகையில் மெதுவாக தனக்குள்ளே முனகிக் கொண்டார். “சிவாமி., சாம்பிராணிப் புகை காட்டுடி, பாத்து இளிச்சிக்கிட்டே ஏன் நிக்கிறே..”, என்றார் எப்போதும் போலான தனது மொட்டை உருட்டுடன். தன் மனைவியை வேலை ஏவிக் கொண்டிருப்பதை எப்போதும் நிறுத்தியதில்லை அய்யாக்கண்ணு. அபரஞ்சி அவரது மொட்டை அதிகாரம் குறித்து தனக்குள் சிரித்துக் கொண்டாள். எப்போதும் நோயுற்றவர்கள், ஏலாதவர்கள் ஆகியோருக்கு யாரையாவது ஏசிக் கொண்டோ, ஏவிக் கொண்டோ இருக்கனும்.

“அய்யா. கட்டு போட்டாச்சு. இனி ஸ்மெல் வராது. அம்மா செண்ட வச்சிருக்காங்க. அடிக்கிறேன். அய்யா கொஞ்சம் எந்திரிச்சி நடங்க. நடந்தாத்தான் ரெத்த ஓட்டம் சரியாயி பழைய காலாகும்” என்றாள் அவள்.

“யாராவது கைய புடிச்சிக்கிட்டா பயமில்லாம நடக்க முடியும்னு பாக்கிறேன். என்ன செய்ய இவளால முடியுமா..?” என்றார். அவர் எதிர்பார்ப்பு என்ன என்பதை அபரஞ்சி உணர்ந்து கொண்டாலும் வாய் திறக்கவில்லை.

“ரஞ்சிதம், அய்யாவ நீ கொஞ்சம் கைபிடிச்சி நடக்க வையேன்” என்றாள் சிவகாமி. அவள் அதற்கும் பதில் சொல்லவில்லை. எல்லாவற்றையும் முடித்துவிட்டு வெளியே வந்தாள்.

எப்போதும் அறிவுள்ள நாய்கள் மனிதனை நன்றாகப் புரிந்து வைத்துக் கொள்கின்றன. அவள் வெளியே வந்து கைகளைக் கழுவி முடிந்தவுடன் அவள் அருகே வந்து வாலை ஆட்டியது. “என்ன, கூட்டிட்டு போகணுமா. கொஞ்சம் பொறுடா கண்ணா. அந்த ரூமை டெட்டால் வுட்டு கழுவிட்டு வாரேன்.” என்றாள். அது விளங்கிக் கொண்டு பவ்யமாக அமர்ந்து கொண்டது. அதன் அழகிய செவலை வாலின் மயிர்குஞ்சம் காற்றை விசிறியது.

அவள் கழுவிக் கொண்டிருக்கும் போது மெதுவாக அம்மா பேச்சுக் கொடுத்தாள். “ரஞ்சிதம் எங்கிருந்து வாரே?”

“அம்மா அஞ்சு ரூவா டிக்கட்டு கொடுத்து வாரேன்னா பாத்துகுங்க.”

“எந்த இடம்னு கேக்கிறேம்மா. ஆறு மாசமா நீயும் வாறே எங்கூட்டுக்கு. உடலெல்லாம் படையாகி, சொறிஞ்சிப் புண்ணாகிக் கறுத்து கறுமுழியா கிடந்தவரைத் தொட்டுத் தூக்கி துடைச்சி இப்ப மனுசனா ஆக்கி வச்சிருக்கே. உன்னப்பத்தி புள்ளயொ கேக்குதுக. நீ எங்கிருந்து வாறன்னு கூடாது தெரியாது சொல்றப்போ அதுக சிரிக்குதுகம்மா. அதான்டீ கேக்குறேன்..”

“அம்மா நான் வண்ணாரப்பேட்டையிலிருந்து வாரேன்மா. என் புள்ளயளும் நானும் இருக்கோம்மா”, என்று சொல்லிவிட்டு மேப்பல்லில் நாக்கை வைத்து “ச்” என்றாள். காதை விடைத்தபடி அவளது அழைப்பிற்காக பொறுமையாய் இருந்த ஜூலி ஓடி வந்தது.

“ஏன்டி. ரஞ்சிதம், ஓங்கூட்ட ஒண்ணு கேக்கணும் ரொம்ப நாளா ஆசை. ஆனா பதில் சொல்லமாட்டியோ நெனச்சித்தான் கேக்கலடீ”, என்பதற்குள் நாய் கேட்டை நோக்கி ஓடியது. “அதை அழச்சிட்டு போய்ட்டு வாரேம்மா” எனச் சொல்லி விட்டுப் பின்னால் ஓடினாள்.

அபரஞ்சி குறித்து சிவகாமியம்மாவுக்கு பலவாறான சிந்தனைகள் உண்டு. எங்கிருந்து வருகிறாள், என்ன பன்றா, எத்தன புள்ளைக, இன்னும் இப்படி பல கேள்விகள் விடைதெரியாது இருக்கின்றன. அறியாத புலத்திலிருந்து

ஒரு மாயப்பெண் போல வந்து விட்டுப் போகிறாள் இவள். சீழ்பிடித்த உடலைப் பற்றி எவ்வித அருவருப்புமின்றி தொட்டுத் தடவி மருந்து போடுகிறாள். ஆனால் அவளைப் பற்றியோ, மற்ற வீடுகளைப் பற்றியோ எதுவும் பேசுவதில்லை. வேலை முடித்து விட்டு உடனடியாக கிளம்பி விடுகிறாள். தண்ணீர் குழாய் வழியே கருக்கலில் வீட்டுக்குள் வந்து சுவரோரமாய் ஓடி புறவாசலில் இரை தேடிவிட்டு மறைந்து போய்விடும் மூஞ்சூறு எலியைப் போல இருக்கிறாள்.

இதுவரைக்குமே சிவகாமியம்மா எத்தனையோ வேலைக்காரிகளைப் பார்த்திருக்கிறாள். அத்தனை பேருமே அடுத்த வீட்டைப் பற்றியோ, வீட்டுக்காரர்களைப் பற்றியோ பேசாமல் இருக்க மாட்டார்கள். இவ என்னான்னா தான் எங்கிருந்து வாரேன்னு கூட சொல்றதில்லே. எப்பேர்பட்ட பெண் இவள் என்று சிரித்துக் கொண்டாள்.

அதற்குள் ஜூடியை அழைத்துக் கொண்டு திரும்பி வந்தாள். சிவகாமி அம்மா அவளுக்காகவே காத்திருந்தாள் முகப்புப் படியில்.

சிவகாமி அம்மா முகத்தை சீரியஸாக வைத்தபடி "வண்ணாரப் பேட்டையா" என்றது. அதன் முகத்தில் நெளிந்த கோடுகளை பார்த்த அபரஞ்சி சிரித்தபடி சொன்னாள்.

"இதுக்கு தாம்மா, நா சொல்றதில்லே. ஏதாவது பேசினா வேலைக்கே ஆபத்து வந்திரும்மா, அதாம்மா எதுவும் பேசறதில்லே. வந்தமா, வேலையப் பாத்தமா ஊட்டுக்குப் போனமான்னு இருக்கேன்."

"என்னடீ சொல்ற,.?"

"ஆமாம்மா. இப்படித்தான் அசோக்கு நகர் ஒரு வூட்டுல வேலப் பாத்தேன். அந்த அம்மாவுக்கு சோரியாஸிஸ் நோய். உடம்பெல்லாம் மருந்து தடவி லைட்டா வெளியில அழைச்சிட்டு போயி உக்கார வச்சி மருந்து சோப் போட்டு குளிப்பாட்டி பின்னாடி மருந்து போட்டு டிரஸ் போட்டு உக்கார வைக்கணும். மருந்தெல்லாம் கந்தக வாடைதான், இருக்க முடியாது. வூட்டுக்காரங்க ஒருத்தரும் எட்டியே பாக்க மாட்டாங்க. நா ஒத்தையிலே எல்லாத்தையும் செஞ்சு விடுவேன். அந்த வூட்டுல ஒரு வார்த்தைதான் சொன்னேன். அடுத்த நாள் எங்க டாக்டர்ட்ட சொல்லி வேலைக்கு வரவேண்டாம்னு சொல்லிட்டாங்க. அதவிடக் கேவலம். சம்பளத்த கூட டாக்டர் மூலமாத்தான் கொடுத்து வுட்டாங்கம்மா. எனக்கு கேவலமும் அசிங்கமாயும் ஆயிட்டு."

"அப்பிடியா... அப்படி என்னம்மா கேட்டாங்க, நீ என்ன சொன்னே."

"ஒண்ணுமில்லே. வண்ணாரப் பேட்ட குடிசைப்பகுதின்னேன். அம்புட்டுதான்."

சிவகாமியம்மா ஒரு நிமிசம் அப்படியே விக்கித்து நின்றது. "இதுக்கு போயா வேண்டாம்னுட்டாங்க."

அம்மா போய்ட்டு நாளைக்கு வாரேன்னு சொல்லிவிட்டுக் கிளம்பினாள் அவள். சிவகாமி அம்மாவுக்கு நிறைய கேள்விகள் இருந்தும் ஏனோ கேட்க முடியவில்லை அன்றைய தினத்தில்.

"சிவாமி.. என்ன பன்றே வெளியல வாடீ, என்னால ஒத்தையில இருக்க முடியல. நீ வாயேன்டீ.'' என்று அதிகாரத்தொனியில் கத்தினார்.

திருமணமாகி 40 வருடங்களுக்கு மேலாக இதே மொட்ட அதிகாரம்தான் கொடிகட்டி பறக்குது. அப்படி ஒரு மதமதப்பு பொஞ்சாதி மேலே. அவரோடு ஒன்றி வாழ்ந்துவிட்ட வாழ்வில் வேறு எதுவும் சிவகாமியம்மாவுக்கு ஏற்பட்டதேயில்லை. முகச்சுளிப்பு ஏற்பட்டு வித்தியாசமாய் உணர்ந்ததுமில்லை. பேதமில்லா வாழ்வு அது.

அபரஞ்சி சொல்லிட்டு போனதை ஜீரணிக்க முடியவில்லை சிவகாமியால். குறையும் வந்து அவரைப் பேணி நல்லமாரியாக்கிட்டு போம்மா என்று தன்னையறியாமல் மனது மருகிக் கொண்டது.

மறுநாள் காலையிலேயே அம்மாவுக்கு முழிப்பு தட்டியது. வேப்பமரத்தில் பூக்கள் நிறைந்து கசப்பின் வாசனை முற்றமெங்கும் படர்ந்து கம்மென்று நின்றது. வேப்பம் பூக்கள் பூப்பதும் உதிர்வதையும் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்தான்.

வீட்டுக்குள் தொலைபேசி ஒலிக்க



> எனது செவி செயலிழக்கும்வரைதான்
> உலகத்தர இசைக்கும் உயிர்ப்புண்டு
> எனது கண்கள் இருண்டுவிட்டால்
> கவின் உலகும் முட்டுச் சந்துதான்
> எனது ருசி காய்ந்த பிறகு
> அன்ன பானாதிகளும் சக்கைதான்
> என்னை மாத்திரமே சார்ந்திருக்கும் பரியந்தம்
> இந்த உலகம் இனிமையானது.
>
> **– கண்ணன் புலமி.**

ஆரம்பித்தது. யார் அழைப்பாயிருக்கும் என்று எண்ணியபடியே, உள்ளே சென்று பார்க்கையில் நியூசிலாந்து மகளின் அழைப்பு எனத் தெரிந்தது. அப்பாவுக்கு இப்ப எப்படி இருக்கிறது என்று கேட்டுவிட்டு, நல்லபடியா ஆறியிருக்குன்னு சொன்ன பிறகு, அபரஞ்சி வந்தா பேசச் சொல்லுமா என்று பேசிமுடித்தாள் மகள். அவள் என்னிடமே பேசமாட்டாள், இதுல செல்லுல எங்கே பேசப் போறாள் என்று நினைத்துக் கொண்டாள்.

எப்போது பத்தரை வரும், அவள் வருவாள் என்றிருந்தது. அம்மாவின் அருகில் படுத்துக் கொண்டு, தூங்குவது போல கேட்டு திறப்புச் சத்தத்திற்காக செவியை விரித்துக் கொண்டு படுத்திருந்தது ஜூடி. அதற்கும் அவளிடம் ஒரு பெரும் வேலை இருப்பதாய் தெரிந்தது.

அன்று அவள் கொஞ்சம் லேட்டாய் வந்தாள். அதற்குள் சிவகாமியம்மாவுக்கு மூச்சு நின்று திரும்பியது போலாகிவிட்டது. உள்ளை நுழைந்த அபரஞ்சி, "அய்யா என்ன செய்றாங்க.",

அதற்கு அம்மா, "நீயே போயிப் பாத்துக்கயேன்" என்றாள்.

மெதுவாக உள்ளே நுழைந்து பார்க்கையில் அய்யா தூங்கிக் கொண்டிருந்தார். காலை தூக்கிப் பார்த்தாள். ஈரக் கசிவில்லை. கொஞ்சம் காய்ந்திருப்பது போலத் தெரிந்தது. இன்று கட்டை அவிழ்த்து போடவேண்டாமென்று அம்மாவிடம் சொன்னாள்.

"அம்மா... நீங்க கேட்க நினைக்கிற கேள்விக்கெல்லாம் என்கிட்ட பதில் இருக்கு. இன்னும் ஆறு மாசத்துல அய்யாவுக்கு குணமாயிடும். அதுக்கப்புறம் நீங்களும் கூப்புட போறதில்லே. நானும் வரப் போறதில்லே. பின்ன நா சொல்றதால என்ன லாபம் ரெண்டு பேருக்கும்."

"ஏன் இப்புடி பேசுற ரஞ்சிதம்?"

"அம்மா ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி அய்யாவ மீறிய ஒரு நடுத்தர வயதுக்காரருக்கு தோல் நோய் இருந்தது. அவரோட, வீட்டுக்காரி பக்கத்துலயே வரமாட்டா. நான்தான் ஆறு மாசம் குளிப்பாட்டி மருந்து போட்டு விட்டேன். குணமாகுற வரைக்கும் என்னோட ரொம்ப நெருக்கமா இருந்துச்சி. நானும் நல்லா பழகுனேன். என் புருஷன் என்ன வுட்டுட்டு வேறொருத்தியோட ஓடிட்டாருன்னு சொன்னேன்.

அவ வீட்டுக்காரர் உடம்பு முழுக்க படை வந்து கிடக்கையில் நான் தான் குளிப்பாட்டி எல்லாம் செஞ்சேன். அப்பம்லாம் எட்டிப் பாக்காதவ, குணமான பொறவு சொன்னாளே ஒரு கேள்வி, அது இந்த ஜென்மத்துக்கும் போதும்மா. குணமானதுக்கு அப்புறமும் மருந்து போட வர்றதாச் சொல்லிட்டு எம்புருசன இழுத்துட்டு போவப்பாக்கியா..?ன்னு கேட்டா. எதுக்கும்மா இந்தத் தொழில் பாக்கணும்னு இருந்திச்சி." சொல்லமுடியாமல் வழியும் நீரைத் துடைத்துக் கொண்டாள்.

"என்னம்மா ஒண்ணும் பேச மாட்டேங்கிறீங்க. "

"என்னத்த சொல்ல ரஞ்சிதம். இப்படியெல்லாமா நடக்கும். சே, என்ன உலகம்டா இது" அம்மா தன் தொங்கும் உதடுகளை மடித்துக் கடித்துக் கொண்டது.

"இதையும் கேளுங்க. நான் பெரிய பங்களா ஊட்டுக்கு போனேன். தாத்தா, பாட்டி ரெண்டு பேராலயும் நடக்க முடியாது. கொஞ்சம் எந்திரிச்சி உக்கார வைக்க, பல் விளக்கச்சொல்ல, சாப்பாட்ட ஊட்டி விட, இதுதான் வேல. அவுங்க புள்ளங்க எல்லாரும், வெளிநாட்டுல இருக்காங்க. செழிப்பான வீடு. ஆனா ஒவ்வொரு சாமானா களவு போய்ட்டே இருந்துச்சி. மொதல்ல வீட்டுச் சாமான்ன உடனே என்னதான் சந்தேகப்பட்டிருங்காங்க. ஒருநாள் தங்க மோதிரம் காணமப் போகவும் என்னட்ட கேட்டாங்க. நா இல்லைன்னே. அம்புட்டுதான். ஸ்டேசன்ல எழுதிக் கொடுத்து

என்ன புடிச்சிட்டுப் போயி மானங்கெட்ட கேள்வி கேட்டானுங்க. அதுக்கு மேலயும் வர்றவங்க போறவங்க எல்லாரும் மானாங்கனியமா அடிச்சு போட்டாங்க. கடேசியில யாருன்னு பாத்தா, அந்த தாத்தா பாட்டியோட பேரன்தான் கஞ்சா குடிக்கறதுக்கு திருடி வித்திருக்கான். எனக்கும் அடியும், ஏச்சும் தான் அந்த ஊட்டுல கிடைச்ச மிச்சம். என்ன செய்யம்மா எனக்கும், எம்புள்ளயளுக்கும் வயிறு இருக்கே. அதான் மானங்கெட்ட பின்னும் இந்த பொழப்ப பாக்க வாறேன்."

கேட்கக் கேட்க சிவகாமியம்மா முகம் சுருங்கிக் கொண்டே போனது. அதன் இளகிய மனதிற்குள் ஒரு ரசபாவம் ஏற்பட்டு இதயம் படபடப்பது போலிருந்தது. உடனே மரசேரை இழுத்துப் போட்டு உட்கார வைத்தாள் அபரஞ்சி. "அம்மா இதையும் கேளுங்கம்மா. இப்படித்தாம்மா ஒரு வீட்டுல நடந்த காதுகுத்து விழாவில் எனக்கு ஒரு புதுச் சேலை கொடுத்து கட்டிட்டு வரச் சொன்னாங்க. நானும் கட்டிட்டு போனேன். என்னைக் கட்டாயப்படுத்தி போட்டோவுக்கு நிக்கச் சொன்னாங்க. நான் வேண்டாம்னு மறுத்தேன். அந்த ஊட்டு அம்மா சொன்னாங்க. நாங்க எங்க ஊட்டுக்கு வந்த எல்லா வேலக்காரிகளையும் சரிசமமாத்தான் நடத்துவோம். எல்லாத்தையும் போட்டோ எடுத்து வச்சிருக்கோம். உன்னய ரொம்ப புடிச்சிருக்கம்மான்னாங்க. நானும் போட்டோவுக்கு நின்னேன். ரெண்டு நாள் கழிச்சித்தான் தெரிஞ்சது அவுங்க போட்டோ பிடிச்சதுக்குக் காரணம். எதாச்சும் பிரச்சினைனு வந்தா போலீசில கொடுக்கிறதுன்னு. அந்த சேலையை ஆத்துல எறிஞ்சிட்டு அந்த வீட்டுப் பக்கமே தலைவச்சி படுக்கலம்மா. எத்தன அவமானங்கள். சரி. மானத்துக்கு கீழே வீட்ட கட்டிட்டு மழைக்கு அஞ்சினா முடியுமா."

சிவகாமியம்மா, சிறிது நேரம் எதுவும் பேசாது இருந்தது. சிறிது நேரத்தில் அவளைப் பார்க்காமல் பேச ஆரம்பித்தது.

"ரஞ்சிதம் பேசாம உம்புள்ளயளயும் கூட்டிட்டு வந்து நம்ம ஊட்டுலயே தங்கிக்கயேன். இம்புட்டு கஷ்டம் இருக்கா இந்த வேலயில."

அபரஞ்சி, அதுக்கு எதுவும் சொல்லவில்லை. ஜூடி அவள் பக்கத்தில் நின்று கொண்டு வாலாட்டியது. அவள் அதனை இழுத்து தன்கைக்குள் வைத்தபடி தடவிக் கொடுத்தாள்.

அடுத்த நாள் அவள் வருகையின் போது எதுவும் பேசாது இருந்தாள் சிவகாமியம்மா. வழக்கத்திற்கு மாறாக அய்யாவும் கொஞ்சம் அறையை விட்டு வெளியே வந்து தெருவைப் பார்த்தபடி இருந்தார். அவர் வேஷ்டியால் காலை மறைத்தபடி அமர்ந்திருந்தார். அபரஞ்சிக்கு அவர் வெளியே வந்து அமர்ந்திருந்தது மகிழ்வாய் இருந்தது.

"அபரஞ்சி வாம்மா" என வரவேற்றார். கட்டுப் போட்டு முடிந்தவுடன் கேட்டார்.

"உனக்கு யாரும்மா அபரஞ்சின்னு பேரு வச்சது..?"

"ஏய்ன்யா.. நல்லாயில்லியா.."

"என்ன புள்ள இப்படி சொல்லிப்புட்ட. எங்க காலத்துல ஒம்பேர்ல ஒரு சினிமா வந்து போடுபோடுன்னு போட்டதும்மா. அதுதான் கேட்டேன்."

"எங்கம்மா பள்ளிக் கூடத்துக்கு கூட்டிட்டுப் போனப்ப என் பேரு என்னன்னு கேக்க கருப்பின்னு சொல்லவும், அவுரு இனிமே அவள கருப்பின்னு கூப்பிடக்கூடாது. அவ பேரு அழகா அபரஞ்சின்னு எழுதிட்டேன்னாரு. அபரஞ்சிதான் அவ பேரு அப்படின்னு ஆறு வயசுல பேரு வச்சிட்டாருய்யா "

அபரஞ்சி நாயை அழைத்துக் கொண்டு செல்லும் வழியில் நின்றிருந்த முள்ளு கருவ மரத்தை டோஸர் வைத்துப் பிடுங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த மரத்தின் மகரந்தங்கள் மஞ்சள் மாவாய் தெருவின் ஓரத்தில் படர்ந்து கிடந்தது. இரண்டு தவிட்டுக் குருவிகள் அந்த மரத்தைச் சுற்றிக் கத்தியபடியே பறந்து வெளியேறின. ஜூடி அந்த இடத்தில் நிற்காமல் அரசமரத்தை நோக்கி அவளை இழுத்தது. வீட்டுக்கு திரும்பி வந்தாள். "ஏடி.. ரஞ்சிதம். நியூசிலாந்தில இருக்குற மக உங்கிட்டே பேசணுமாம். கொஞ்சம் இருந்து போறியா."

அபரஞ்சி அமர்ந்திருந்தாள். அந்த இரண்டு தவிட்டுக் குருவிகளும் மனதிற்குள் பறந்தபடி இருந்தன. அவை எங்கே போகும். பாதி வாழ்க்கை முடிந்த பின்னே மீதி வாழ்க்கைக்கு எங்கே போகும். கல்போல கனத்தது மனது.

செல்லில் நீள் வெளிநாட்டு ஒலியழைப்பு வந்தது. "இந்தா மொவ பேசுறா", செல்லை அபரஞ்சி கையில் கொடுத்தது.

"அபரஞ்சி, எங்க வீட்டுலயே தாய் தகப்பன பாத்துக்கிட்டு இருக்கணும். சரியா."

அவள் பதிலெதுவும் சொல்லவில்லை.

"நேத்து அம்மா சொல்லிச்சி ஒங்கதைய பத்தி. ரொம்ப வருத்தமா இருந்துச்சி. எதுக்கும் கவலைப்படாதே. இனிமே நாங்க கவனிச்சிக்கிறோம்."

"இல்லம்மா. இது எனக்கு மட்டும் ஏற்படுற பிரச்சினையில்லம்மா. வீட்டு வேல, வெளி வேலன்னு போற எல்லாத்துக்கும் நடக்குறதாம்மா. என்ன செய்ய பெண்களோட தலையெழுத்தும்மா அது."

"நா இப்போ எட்டு மாசமா இருக்கேன். பிள்ளை பெறந்தவுடன் இங்க பேரக் கொடுக்கணும். பொம்பளப் புள்ளயின்னா என்ன பேரு வைக்கப் போறேன்னு தெரியுமா? அபரஞ்சிதான். ரொம்ப புடிச்சிருக்கு அந்த பேரு மட்டுமல்ல. உனக்காகவும்தான். சரி என் அப்பா அம்மாவெ இங்கிருந்து பாத்துக்கிடுவாயா?"

"அம்மா உங்க அப்பாவுக்கு வியாதி தீந்து போச்சி. இனிமே நான் தேவையில்லே. டாக்டர் ராயப்பேட்டையில ஒருத்தருக்கு தோல் வியாதி. அங்க போயி அட்டென் பண்ணுனு சொல்லிட்டாரு. அவருதானே சம்பளம் தாராரு. வியாதிய போக்கத்தான் படிச்சிருக்கேன். பின்னே போகாம முடியுமா. சொல்லுங்க பாக்கலாம்."

அய்யாக்கண்ணுவும், சிவகாமியம்மாவும் எதுவும் அறியாதவர்கள் போல அவளைப் பார்த்தபடியிருந்தார்கள்.

அமைதியாக அவளைப் பார்த்துக் கொண்டிருந்த ஜூடியைத்தான் அவளால் நேரிடையாகப் பார்க்க முடியவில்லை. •

## நதியில் நிறமாற்றம்!

பார்த்துப் போயிட்டு வாங்க ,
கையசைத்தனுப்பி வைத்தேன், பாப்பாக்களை...
என் நான்கு வயது பாப்பாவையும்,
பாப்பாத்தியென்றழைக்கப்படும்,
எம்பது வயது பாட்டியையும்..
கடை வீதிக்கு கை கோர்த்தவாறே
நடந்தனர் இரு பாப்பாக்களும் .

★★★

பாவங்களைச் சுமந்து வந்தே
குளித்தெழுகிறோம்.
உடம்பிலிருந்தொழுகிய நீரில்
கரைந்ததாகவேயெண்ணங்கொண்டே
எழுகிறோம்.
சலனமற்ற ஓடிக்கொண்டிருக்கும்
நதியில் நிறமாற்றம்.
கடல் சேர்ந்ததும் கரிக்கிறது
உப்பாக.



– செ.ச.பிரபு.

மூலம் - கார்லஸ் ட்ரும்மாண்ட் டி ஆண்ட்ராட் ஆங்கிலம் - ஜான் நிஸ்ட்
ஆங்கில வழி தமிழில் - **சந்திரா மனோகரன்**

# கறை படிந்த கரம்

என்கரம் கறை படிந்தது
அதைத் துண்டிக்க வேண்டும்
கழுவுவதற்கு பயனற்றது
தண்ணீரும் அழுக்கு
சவக்காரம் போட்டால்...
அதுவும் தகுதியற்றது
கரத்தில் மாசு படிந்திருந்தது
பல ஆண்டுகளாக...

என் காற்சட்டைப் பைக்குள்
அது ஒளிந்துகொள்ளும்
யாருக்குத் தெரியும் ?
அநேகர் என்னையணுகி
கரங்குலுக்க கரம் நீட்டுவர்
நானோ மறுத்துவிடுவேன்
மறைந்திருக்கும் கரமோ
இருளுக்குள் துழாவும்!
அதேதான், நானறிவேன்
அங்கேயே இருக்கட்டும்
கடுவெறுப்புதான்

ஆகா, எத்தனை இரவுகள்
வீட்டில் தரித்திருக்கும்போது
அதைக் கழுவியிருக்கிறேன்
அழுத்தித் தேய்த்துத் தூய்மையாக்கி
எப்படியும் அது
நீலப்படிகம் போன்றோ
வைரம்போன்றோ ஆகும்
அல்லது, குறைந்தபட்சம்
வெண்ணிறக் கையாகவாவது...
ஒரு மனிதனின் கறைநீங்கிய கரம்
அதைத் தொட்டு உயர்த்தி
உங்கள் அதரங்களைத் தீண்ட ஏதுவாக
தழுவும் உங்கள் கரங்களாக...
சில கணங்களில்

இருவர் மோனமாய் நின்றிருக்க
தீராப்பிணி போன்ற கரங்கள்
தன் விரல்களை விரிக்கின்றன

அது இழிவான கறை
மண்ணின் அழுக்கன்று
கரியின் அழுக்குமில்லை
கடுந்தழும்பின் கசடுமல்ல
சட்டையில் கசியும் வியர்வையுமல்ல
ஒரு வேலையாளின்
துயரமிகு கறை அது
நோயினால் உருவானது



மனிதனின் தீராத
மனவேதனையினால் ஆனது
அருவருப்பான தோலில்
அது கருமையான கறையில்லை
வெண்ணிறம் கொண்ட
மாசுமருவற்றது
சாம்பலும் பழுப்பும் கலந்த
நிறம் அதற்கு
சாம்பலும் பழுப்புமாய் மங்கலான சாயலில்
காட்டு முட்செடி போன்றது

வைத்திருப்பதில் பயனில்லை
இழிவான பழிப்புக்கிடமான கரம்
இப்பொழுது மேசைமீது
சீக்கிரம் வெட்டு ...
கடலில் எறிந்துவிடு !
காலமும் நம்பிக்கையும் இருக்கிறது
யந்திர உலகத்தில்
புதிய கரம் முளைக்கும்
தூய்மையானதாய் ... களங்கமற்றதாய்
என்னோடு இறுகப்பிணைந்துவிடும் .



வழக்கமான கவிதை வடிவிலின்றி உரை நடை போல் பத்தி பத்தியான கவிதையமைப்பு தெலுங்கில் அதிகளவில் காணவியலுகிறது. அவ் வகையிலான கவிதை ஒன்று

தெலுங்கு மூலம் - ஆஷாராஜு தமிழாக்கம் – **சாந்தா தத்**

# லங்கா தகனம்

வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட இளவரசியின் ஆபரணங்கள். மரக் கிளைகளில் சிக்கிக் கொண்ட மகாராணியின் கால் கொலுசுகள் கரையில் சரிந்திருந்த வெண் குதிரைகள் முதலை வாய்க்குள் உடைந்த தேர் சகடங்கள் நீருள் மூழ்கியெழும் சிப்பாயின் இரும்புத் தொப்பி அலைகள் ஊசலாட்டங்களில் சேலைகள் இரவிக்கைகள் தங்க இழைத் தாவணிகள்... ...சூரிய சந்திரர்கள் நதியியிலிறங்கி நாற் திசையும் துழாவியபடி....

அணில் இராமனுக்காக எதிர் பார்த்தபடி........மறைவிடத்தினின்று இராவணன் நுழைவு. வாயிலருகே பிணைந்திருந்த வலையில் அழகான அலங்கார மண்டோதரி சிக்கிக் கொண்டாள். "ரேபான்" கிளாஸ் அணிந்த சூர்ப்பனகை மாறு வேடத்தில் ஓடி விட்டாள். அனுமான் ஊர் எல்லையில் நின்று விட்டான்.

அயோத்தியாவில் இராமன் மகுடாபிஷேகம் அமர்க்களமாய் நடந்தேறியது. வாக்குப் பட்டியலில் பெயருள்ளவர் மட்டுமே அனுமதி அவ் விழாவில்.. அழைப்பிதழும் வரவேற்பும் அனைவரையும் அடையவில்லை. அழைப்பிதழ் அடைந்தவர்கள் இராமன் யாரோ... அறியார்! அரியாசனம் சுற்றி மகுடம் புரண்டபடி... .கொள்ளையர்கள் இராஜ்ஜியத்துக்காக போட்டியிட்டபடி.....

இராம லட்சுமணர்கள் நாற் சந்தியில் நின்று பட்டம் பறக்கவிட்டுக் கொண்டிருக்கிறார்கள். குடி மக்கள் இராவணனைச் சிறைப் பிடிக்கப் புறப்படுகிறார்கள் இள வயது லவ குசர்கள் கிரிக்கெட் மட்டையுடன் பிரவேசம்.. பாட்டிசைத்தவாறு எதிர்பட்ட வால்மீகியை எவரும் இனம் காணவில்லை

முதலில் லங்கா தகனம் நடந்தே தீர வேண்டும் என்கிறார்கள்...

# ஒருசொல்மகள்

அதுவாகவே நிரம்பி தாயை
பிரதியெடுத்த
ஒற்றைவழிமகள் ஒளியெனத்திரளும்
ஞானமின்னல்...
வனாந்திரத்தில் அதுவன்றி
இளைப்பாறும் நிழல்
கோணல்களற்றது
வேறொன்று சாத்தியமற்றது...
எல்லாக்காலமும் தேங்கிநிற்கும்
பெரும்கருணை
வாக்கபட்டுபோனாலும்
நமக்கெனவே அருள்பாலிக்கும்
ஒருசொல்மகள்



நிலத்தை நிறைக்கும் ஒத்திசைவு
மகாநாதம் யாரால் மறக்க முடியும்???
முன்னிலை ஒருமை
அப்பாமகள் உறவு அரூப தரிசனம்
அம்மாவோடு உரையாடுவதைப்போல...

– **தஞ்சை தவசி**



## நிறைவு

உணவால் நிறையாத அந்த
ஓட்டைக்கூரை வீட்டின் பாத்திரம்,
நேற்றிரவு பெய்த மழையில்
நிரம்பி வழிந்திருந்தது..!

## வேலைக்காரி

நேற்றிரவு பட்டினியில் படுத்துறங்கிய
குழந்தைகளை எழுப்ப மனமில்லாமல்
மாடிவீட்டுக்கு பாத்திரம் கழுவச்சென்றவளின் மனம்,
ஆதங்கத்தின் உச்சத்தை தொட்டிருந்தது,
கழுவப்போட்ட பாத்திரத்தில் மீதமிருந்த
சோற்றை அள்ளிப் போடும்போது.

## நிசியின் பசி

எத்தனை வேடன்கள் தன் அம்பை
கையில் ஏந்திக்கொண்டுத் திரிந்தாலும்,
எப்படியாவது கடந்துதான் ஆகவேண்டும்
அந்த இருள் போர்த்திய சாலையை.!
சித்தாள் வேலைக்கு கூலி கொடுக்காத
முதலாளியை சபிக்க மனமில்லாமல்
வெறுங்கையுடன் வீடு திரும்பியவள்,
நான்கு சல்லிக் கற்களையாவது
பொறுக்கிக் கொண்டு வந்திருக்கலாம்,
உமிழொழுக முச்சந்தியில் காத்திருந்து
துரத்தும் நாய்களை விரட்ட!

– சகி



எம் பாதங்கள்
தினந்தினமும் கடக்கின்ற
சாலை தான் அது...
எப்போதும் இல்லாத
வெளிச்சமும்...வெக்கையும்...

உற்று நோக்கியபடியே
ஏதோ மன நெருடல்களுடன்
அந்த இடத்தை
கடந்த போது உணர்ந்தேன்
பெரிய வெற்றிடத்தை...

அந்த வெற்றிடத்தை உணர்ந்த
குயில்களும் காக்கைகளும்
என் காதுகளுக்குள்
பாடுவதைப்போலும்
கரைவதைப்போலும் இருந்தன!

சில நிமிடங்களில்
இலைகளற்ற சிறிய கிளையின்
குட்டிக்கிளை ஒன்று
எம் கால் விரல்களில்
சிக்கிய போதே உணர்ந்தேன்...

யாதுமற்று
கொலையுண்டு கிடப்பதை...
கூடுகளை இழந்த பறவைகள்..
பெரும் நிழலை இழந்த நாம்...
தன்அடையாளத்தை இழந்த சாலை!

பிணி வந்தால் தானே அறுவைச்சிகிச்சை...
தன் பணியை
செவ்வனே செய்யும் மரத்திற்கு
ஏனோ அறுவைச்சிகிச்சை?!

மூச்சடைப்பு வருகிறதே..
உம் மூச்சை நிறுத்தியதால் தானோ?!
விதைகளை தூவத் தயாரானேன்..
அடுத்த தலைமுறை நிம்மதிப்
பெருமூச்சு விட...

அங்கே ஒற்றை வேப்பங்கன்றை நட்டுவிட்டு
மனதிற்குள் ஆயிரம்
மரங்களை நட்டுவிட்ட மகிழ்ச்சியோடு
மனம் கம்பீரம் காட்டுகிறது!

– ம.சக்திவேலாயுதம்



# சொல் குறிப்புகள்

• ஜெயதேவன்



ஒரு பாவைக்காயிடம் பேசிவிட்டு
ஆப்பிளுடன் பேசவேண்டும் என்றால்
அதற்காக ஆப்பிள் மொழி தெரியவேண்டும்
ரோஜாவுடன் ரோஜா மொழியும்
புள்ளிமானிடம் மான் மொழியும் பேசினால்
அவை காட்டில் நமக்கொரு வீட்டைக் காட்டும்

நம் வீடுகள் மொழியற்றவை
நம் சப்தங்கள் மொழியல்ல
அவை ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றுமா?
புறா முட்டையிலிருந்து
ஒரு புறாக் குஞ்சைப் பொறிக்குமா?
மலட்டுக் குதிரையில் ஏறிப் போகும் நாம்
கல்லறைக்கு முன் பேசலாம்
நம் புரியாத மொழிகளை

கடவுளின் வீட்டிலிருந்து நீ
மௌனத்தை வாங்கி வந்தாய்
ஒரு கல்லும் கற்றாழையும் காகிதமும் கூட
உனக்கு தந்திருக்கலாம் மொழியை
ஒரு பூவும் பூவும் பேசும்
உன்னத மொழியைத் தெரியாத
நானும் நீயும் பூவுக்குப் பெயர் வைப்பதால்
அது சிரித்துக் கொள்கிறது

புறா இறகு உதிர்கிறது
அதன் மொழி கேட்டு அழுகின்றன இலைகள்
இறகை எடுத்து காது குடைந்து கொண்டே
நாம் சொல்கிறோம் புறாக் கறி இனிது

வண்ணத்துப்பூச்சிக்கு வண்ணம்தான் மொழி
என்று அறியாத நான்தான்
என் வீட்டுக்குக் கதவு எண் இடுகிறேன்
அடையாளம் அற்றுப் போன அநாதையாய்
எந்தப் பறவைக்காவது
வீட்டு முகவரி உண்டா?

சாத்தப்பட்டன
சாளரக்கதவுகள்
இருளென்பதை
கிரகித்துக்கொள்ள....
துவார இடைவெளியில்
உட்புகுந்து ஆட்கொள்கிறது
கீற்றொளியும்....
சுவாசமும்...
தயவுசெய்து
திறந்துவிடுங்கள்
மனம்போல்
வியாபித்திருக்க
நேசமும்பாசமும்....!

★ ★ ★

உயரப்பறந்து
தாமடைந்த
மரக்கூட்டினை
உச்சிமேட்டிலிருந்து
தேடுகின்றன
தாம் நிற்பதே
அவைமீது எழுப்பப்பட்ட
சமாதியென்றறியாத
சமாதானப்புறாக்கள்...



– ப. தாணப்பன்

# உள்ளம் பெருங்கோவில்

• சங்கரராம பாரதி

உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுக்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலனைந்தும் காளா மணிவிளக்கே

– திருமூலர்

உலகிலேயே மிக வலிமையானதும் அதிவேகமானதும் மிக சிக்கலானதும் உடையது நமது மனமே ஆகும். பலரும் மனம் என்பது என்ன என்பதை அறிய போராடி வருகின்றனர். மனம் என்பது இதயமா மூளையா? என்பது போன்ற பட்டிமன்றங்கள் எல்லாமே அரங்கேறியும் வருகின்றன. மனதினை அடக்குதல் என்ற வகையில் பல அறநூல்கள் தமிழிலேயும் மனதை எப்படி ஆளுவது என்ற வகையிலே பல்வேறு அறிஞர்களும் தொடர்ந்து எழுதியும் பேசியும் வருகின்றனர். தன்னை அறிந்தவனே தரணியை ஆளலாம் என்ற தத்துவமே உலகம் முழுவதும் பேசப்பட்டு வருகிறது. பெரிய நிறுவனங்கள் போலவே சில அமைப்புகளும் வாழும் கலையினைக் கற்றுத் தரும் பயிற்சி நிறுவனங்களாக மாறிவருகின்றன. இவையெல்லாம் தாண்டி நமது மனதை வடிவமைக்க முடியுமா? என்ற கேள்வியோடு நாம் நம்முடைய மனதினை அணுகுதல் அவசியம் . பிறக்கும் போதே நமது உடலின் டி.என்.ஏவை மாற்றி அமைத்தால் நாம் அனைவருமே நல்லவர்களாக இயங்கலாம் என்ற வகையில் நமது இயக்கத்தை பற்றிய ஆராய்ச்சியும் மருத்துவ துறையில் நடைபெற்று வருகிறது. அதைவிட ஒரு படி மேலே போய் கடவுள் துகள் பற்றிய ஆராய்ச்சியும் பெருமளவில் நடந்து வருகிறது என்பதையும் நாம் மறந்துவிட இயலாது. நாம் அறி;ந்தவரை இந்த உலகில் தன்னை அறியும் முயற்சியாகவே பலரும் தங்களின் வாழ்க்கையை கடந்து வருகிறார்கள் . இந்த உலகில் நாம் தோன்றிய நோக்கத்தை அறிந்து கொள்ளும்போதுதான் வாழ்க்கையும் நிறைவுபெறுகிறது. ஒவ்வொரு தேடலுமே நம்முடைய புறத்தேடலாகும்போது அறிவாகும்போது அறிவாகவும் அகத்தேடல் ஞானமாகவும் பார்க்கப் படுகிறது. ஞானத்தின ஆரம்பநிலைதான் ஞானமாக வெளிப்படுகிறது

*மனம் அடக்கப்பட வேண்டியதில்லை*
*ஆளப்படவேண்டியது* - சதா பாரதி

மனம் வித்யாசமானதே. அதை நாம் எப்படி பழக்குகிறோமோ அப்படித்தான் அது இயங்கவும் செய்யும். அந்த மனதையும் உடலையும் ஒருமுகம் செய்யும் ஒரு பயிற்சியாக நாம் செய்வதையே தியானம் என்கிறோம். பொதுவாக தியானம் என்பதற்கு பல்வேறு வரையறைகள் இருந்தாலும் என்னைப் பொறுத்தவரை நாம் எந்த வேலை செய்கிறோமா அந்த வேலையை முழு ஈடுபாட்டோடு செய்வதையே தியானம் என்பேன். வீட்டைப் பெருக்கும் வேலையில் இருந்தால் கடைசி குப்பை வெளியேறும் வரை முழு ஈடுபாடோடு வேலைசெய்து பெருக்குவதும் ஒரு வகையான தியானமாகும். சாப்பிடும்போது அதன் ஒவ்வொரு பருக்கையையும் ரசித்து ருசித்துச் சாப்பிடுவதும், குளிக்கும்போது கூட குற்றாலத்தில் குளிப்பது போன்ற அனுபவத்தோடு கொண்டாடிக் குளிப்பதுவுமே தியானம் எனலாம். எதையும் எதிர்பார்த்து தியானம் செய்வது நல்லதல்ல. ஆனால் செய்வதன்மூலமாக அனைத்தும் பெறலாம் என்பதே இந்த தியானத்தின் வலிமையாகும். பல்வேறு மிகச்சிறந்த காரியங்கள் அனைத்தையுமே நம்முடைய மனம் எளிதாக செய்ய வேண்டும் எனில் மனம் அதன் வலிமையை உணர வேண்டும். அந்த வலிமையை மனதிற்கு வழங்குவதே தியானம் எனப்படுகிறது. எதை நினைத்து தியானிக்கிறோமோ அது கிடைக்கும் அல்லது நடந்துவிடும் என்பதே பொதுவான நம்பிக்கையாகும். அது நாம் ஈடுபாட்டோடு செய்யும் தியானத்தைப் பொறுத்தே அமைகிறது. நம்முடைய ஒவ்வவொரு காரியத்தையும் சிரத்தையுடன் செய்தாலே தனியாக தியானம் செய்யவேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. எந்த நேரத்திலும் நம்முடைய தன்மையினை இழக்காதவாறு நாம் வேலையினைச் செய்தாலே போதுமானது

ஒரு குட்டிப்பையன் தனது தாத்தாவோடு கடற்கரையில் நடைபயிற்சிக்கு போவது வழக்கம். நடைபயிற்சி முடிந்தவுடன் தாத்தா மட்டும் ஒரு மறைவான இடத்தில் அமர்ந்து தியானம் செய்வாராம். ஒரு நாள் வழக்கம்போல தாத்தாவும் பேரனும் நடைபயிற்சிக்குச் சென்றார்கள். வழக்கம்போலவே நடைபயிற்சி முடிந்தவுடன் பேரன் விளையாடிக் கொண்டிருந்தான். தாத்தாவும் தியானத்திற்குச் சென்றுவிட்டார். நேரம் அதிகமானதால் தாத்தாவைத் தேடி அவர் இருக்கும் மறைவான இடத்திற்குச் சென்று பார்த்தான். அங்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. தாத்தா ஆழ்ந்த தியானத்தில் இருந்திருந்தார். அவருடைய தலையிலும் தோள்களிலும் புறாக்கள் அமர்ந்து கொண்டிருந்தது. அவரோ எவ்வித பாதிப்பும் இன்றி தியானத்தில் இருந்தார். இதைப் பார்த்த சிறுவன் தியானம் முடியும் வரையில் அமர்ந்திருந்து தாத்தாவை அழைத்துச் சென்றான். வீட்டுக்குப் போகும் வழியில் தாத்தாவிடம் அவருடைய தியானத்தின்போது புறாக்கள் அமர்ந்த விஷயத்தை சொல்லி ' நாளை தியானம் செய்யும் போது எனக்கு புறாக்களைப் பிடித்து தாருங்கள்'' என்றான் சிறுவன்

தாத்தாவோ பேரனின் பாசத்தை ஏற்றுக் கொண்டார். மறுநாள் வழக்கம்போலவே நடைபயிற்சி முடித்து புறாக்கள் பிடித்து கொடுக்க வேண்டும் என்ற ஆசையோடு தியானத்தில் அமர்ந்தார். நேரம் சென்று கொண்டே இருந்தது. அவரது அருகில் கூட அன்று ஒரு புறாவும் வரவில்லை. நெடுநேரம் அமர்ந்து பார்த்துவிட்டு ஏமாற்றத்துடன் திரும்பினார். அன்று அவருக்கு புறாவும் கிடைக்கவில்லை. தியானமும் கிடைக்கவில்லை.

இந்தக் கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள். இதன் அர்த்தமும் உங்களுக்கு புரியும். எதையும் எதிர்பாராமல் நாம் செய்யும் தியானத்தினால் எல்லாமே நடக்கும். ஆனால் புறாவினைப் பிடிப்பதற்காக அமர்ந்த தியானத்தினாலே புறாவும் வரவில்லை. தியானமும் நிறைவுபெறவில்லை. மனம் ஒருமுகம் இல்லாத காரணத்தால் எதுவும் நடைபெறவில்லை. ஒவ்வொரு தியானமும் நம்மை உடலளவிலும் மனதளவிலும் வேறொரு உலகத்திற்கு கொண்டு கொண்டு சேர்க்கின்றன என்பது உண்மையே..

வேப்பமரத்தில்
அமர்ந்திருந்தாலும்
புத்தன் ஞானம் அடைந்திருப்பான்
ஞானத்திற்கு மரம் அவசியமில்லை
மனமே அவசியம் – சதா பாரதி

அதிகாலை வேளையில் நமது மனதை ஒருசில நிமிடங்களாவது ஒரு முகப்படுத்தும் தன்மைக்கு நேரம் ஒதுக்குவது அவசியமாகும். ஒவ்வொரு நாளும் நம்மை புதியதாக மாற்றிக் கொள்வதற்காக நாம் ஒதுக்கும் நிமிடங்களே நமக்கு தியானம் செய்யும் நேரங்களாகும். காலைவேளையில் நன்றாக குளித்து விட்டு தரையில் ஒரு சிறிய விரிப்பை விரித்து வசதியாக அமர்ந்து கொண்டு மூச்சை நன்றாக உள்ளிழுத்து விடுங்கள். சில நிமிடங்கள் அதை சற்றே உற்றுக் கவனியுங்கள். அது மேலும் கீழுமாக இறங்கி ஆழ்ந்த அனுபவத்தைத் தரும்.



நமக்கு பிடித்த ஏதேனும் ஒரு விஷயத்தை நினைத்தாலே போதுமானது. அதுவே நமக்கு பெரிய உற்சாகத்தை தரும். அன்றை காலகட்டங்களில் நமது பெரியோர்கள் பல்வேறு வகைகளில் தியானத்தை தியானமாக செய்யாமல் வேறுவகையில் நம்மை நாம் செய்யும் சிறு சிறு வேலைகளிலே பழக்கப்படுத்தி தியானத்தோடு ஒன்றச் செய்தார்கள். பொதுவாக அதிகாலைநேரங்கள் நம்மை ஒரு புதிய உலகத்திற்கு கொண்டுசெல்கின்றன. அந்த இனிய நேரத்தில் நாம் செய்யும் காரியங்கள் சிறப்பாக நடைபெற நம்முடைய மனதினை ஒருமுகப்படுத்துவது அவசியமாகும். நம்முடைய சின்னச் சின்ன காரியங்கள் கூட நல்ல சிரத்தையோடும் நம்பிக்கையோடும் செய்வதற்கு அதிகாலைத் தியானங்கள் அவசியமாகிறது.

அதிகாலை வேளையில் பெண்களை தியானப்படுத்துவதற்காக செய்யப்படுவதற்கான காரணங்களில் ஒன்றுதான் கோலம்போடுவதாகும். அதிகாலைவேளையில் அவர்களின் மனம் ஒன்றுபடுவதற்காக கோலம் போடுதல் என்ற வகையில் செய்யப்பட்டதாகவே கருதுகிறது. புள்ளிகள் ஒன்றோடன்று இணைப்பையே பிரதானமாகக் கொண்டு போடப்படும் கோலங்கள் வாழ்க்கையின் தத்துவங்களை விளக்குவதாக அமைகிறது. ஒவ்வொரு புள்ளியும் வைக்கப்படும்போது கிடைக்கப்படும் ஒருமுகத் தன்மை அவர்களை மேலும் வலுவானவர்களாக மாற்றி விடுகிறது என்றால் அது மிகையாகாத ஒன்றே. நம் மனம் ஒன்றுபடுகையில் புறச்சூழல்கள் நம்மை எந்த வகையிலும் பாதிப்படையச் செய்வதில்லை என்பதே உண்மையாகும். இசை கேட்பது போன்ற சூழல்கள் நம்முடைய தியானத்தை இன்னமும் வலுப்படுத்தும். •

→கட்டுரை

# பூட்டிய கடை வாசலில்...

• இரா.நாறும்பூநாதன்

பள்ளிக் காலங்களில் ஞாயிற்றுக்கிழமை பகல்பொழுதுகளில் ஊர்க்காடெல்லாம் மேய்ந்து விட்டு, பகல் இரண்டரை மணிக்கு பூட்டியிருக்கும் கடை வாசல்களில் நண்பர்களோடு அமர்ந்து பேசும் சுகமே தனியானது.

கோவில்பட்டி தெற்கு கடை வீதியில் உள்ள ஒவ்வொரு கடையும் ஒரு ரகம். தினமணி ஸ்டோர்ஸ் என்றொரு கடை உண்டு. கடை நல்ல அகன்றதாய் இருக்கும். ஒரே ஒரு படியாய் இருப்பதால், உட்கார்ந்து பேச வசதியானது. சில செட்டியார்களின் நகைக்கடைகள் ஆறேழு படிக்கட்டுகளோடு அமைந்தவை. ஒவ்வொரு படிக்கட்டிலும் ஓரிருவர் என அமர்ந்து நண்பர்கள் முகம் பார்த்து பேச இன்னும் வசதியாய் இருக்கும். பேசுவதற்கா நம்மிடம் கதைகள் இல்லை?

பலசரக்கு கடைகள் வாசல் படிகள் எண்ணெய் மக்குப் படிந்திருக்கும். கடையின் வெளிப்புறத்தில் வலது ஓரத்தில் எண்ணெய் டின்கள் பரத்தி வைக்கப்பட்டிருப்பதால், அங்கே அமர்ந்து பேசும்போது பலகாரக்கடையின் நடுவில் அமர்ந்திருப்பது போலவே தோன்றும்.

இப்போது போல பாக்கெட் எண்ணெய்கள் வராத காலம். எண்ணெய் ஜாடி, புனல் வகையறாக்கள் பயன்பாட்டில் இருந்த காலம்.

வார நாட்களில் தெருவை அடைத்து வாடிக்கையாளர்களை வசீகரிக்கும் கடைகள், ஞாயிறு அன்று உள்ளடங்கி அதன் இயல்பில் இருக்கும் போது, இந்தக்கடையா இப்படி இருக்கு என்று ஆச்சரியப்படுத்தும்.

ஞாயிறு இரவு பூட்டிய கடைகளில், அந்தக் கடையின் ஊழியர்கள் சிலர் கூட மதியம் பார்த்த சினிமாக்கதைகளை விமர்சித்தபடியோ, நண்பர்களின் காதல் லீலைகளை கேலி செய்தபடியோ அரட்டை அடிப்பதை பார்த்திருக்கிறேன்.

மூத்த அண்ணன்மார்கள் சிலர் பூட்டிய கடையின் வாசலில் அமர்ந்து காராசாரமாய் அரசியல் விவாதம் பண்ணுவதும் உண்டு. கோவில்பட்டிக்கே உரிய விசேஷ தன்மையுடன் படித்த புத்தகங்களை மானங்கண்ணியாய் விமர்சிப்பவர்களும் கூட இந்த பட்டியலில் அடங்கும்.

ஞாயிற்றுக்கிழமையே குதூகலம் கொடுக்கும் நாளென்றால், பூட்டிய கடை வாசல் அரட்டை அதைவிட இனிமையானது.

பிற்காலத்தில், நெல்லை வந்தபோது, கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முதுபெரும் தோழர். எம்.பாண்டியன் ஞாயிற்றுக்கிழமை கதைகளை வேறு கோணத்தில் சொல்வார்.

இது எண்பது ஆண்டுகளுக்கு முன்பு உள்ள கதை.

கடைகளில் வேலை பார்க்கும் சிப்பந்திகள் காலை ஏழரை மணிக்கு வந்தால், இரவு பதினொன்றரை மணி வரை வேலை பார்க்க வேண்டும்.

மதிய சாப்பாட்டிற்கு ஒருமணி நேரம் இடைவெளி விடுவார்கள். ஞாயிற்றுக்கிழமை வார விடுமுறை கிடையாது.

ஒவ்வொரு மாதத்திலும் கடைசி ஞாயிற்றுக்கிழமையில் மட்டும் அரை நாள் விடுமுறை உண்டு.

சம்பளமும் மிகவும் குறைவு தான். மாதம் மூன்று ரூபாய். சிப்பந்திகளில் மூத்தவரான கணக்கப்பிள்ளைக்கு மாத்திரம் பன்னிரண்டு ரூபாய்.

தீபாவளி போனஸ் என்பது சிப்பந்திகளுக்கு ஒரே ஒரு துண்டு தான். அதுவும் கூட குற்றாலம் துண்டு போலத்தான் இருக்கும். பெரிய கணக்கப்பிள்ளைக்கு கௌரவமாய் ஒரே ஒரு வேஷ்டி.

வருடாந்திர கணக்கு போடும் நாளில், சிப்பந்திகளுக்கு ஒரு ரூபாயோ அல்லது இரண்டு ரூபாயோ "இன்கிரிமெண்ட்" தரப்படும்.

**தொழிலாளர் நலத்துறை என்றொரு துறை இருந்தபோதிலும், இந்த நிறுவனங்கள் வார விடுமுறை, குறைந்தபட்ச கூலி போன்றவற்றை எல்லாம் காற்றில் பறக்க விட்டு விட்டு, எவ்வளவு அபராதம் என்று கேட்டு அவற்றை கட்டி விட்டு தங்களின் ஏவாரத்தை நன்றாக நடத்திக்கொண்டிருக்கிறார்கள்.**



1943இல் தான், இந்த சிப்பந்திகள் குறைகளை களைய ஐக்கிய வர்த்தக குமாஸ்தாக்கள் சங்கம் என்றொரு அமைப்பை உருவாக்கி, வார விடுமுறை தர வேண்டும் என்பதை ஒரு கோரிக்கையாக வைத்தார்கள்.

எட்டு மணி நேர வேலை, சம்பள உயர்வு போன்றவையும் உப கோரிக்கைகள்.

இந்த சங்கத்தின் பிரதான கோரிக்கையான ஞாயிற்றுக்கிழமை வார விடுமுறை என்பதை வலியுறுத்தி நடைபெற்ற போராட்ட முறை விந்தையானது. இந்த சங்கத்தில் உள்ள உறுப்பினர்கள் ஒரு காக்கி அட்டையில் "ஞாயிற்றுக்கிழமை திறக்கும் கடைகளில் சாமான்கள் வாங்காதீர்கள் " என்று எழுதி அதை தாங்கள் வேலை பார்க்கும் கடை முன்பு பிடித்தபடி நிற்பார்கள். இந்த போராட்டம் ஆறு மாதகாலம் நடைபெற்றது. கடை முதலாளிகள் இப்படி போராடும் சிப்பந்திகளை வேலை நீக்கம் செய்திருக்கிறார்கள். கெடுபிடிகள் நிறையவே உண்டு.

இந்த போராட்டம் தூத்துக்குடி, திருநெல்வேலி பகுதிகளில் தீவிரமாகவே நடந்தது.

தொடர் நிர்ப்பந்தம் காரணமாக போராடிய சிப்பந்திகளுக்கு ஞாயிற்றுக்கிழமை வாரவிடுமுறை கிடைத்தது. விடுமுறை அளித்தபிறகு, போராடிய சிப்பந்திகளை வேலைநீக்கம் செய்த முதலாளிகளும் உண்டு. அதை எதிர்த்து வழக்கு போட்டார்கள்.

வழக்கில் சிப்பந்திகளுக்கு ஆதரவாய் என்.டி.வானமாமலை, பாளை.சண்முகம் போன்ற வழக்கறிஞர்கள் பேசி, வெற்றிகரமாய் சிப்பந்திகளுக்கு மீண்டும் வேலை வாங்கி தந்தனர்.

இப்படி, தமிழ்நாடு முழுவதும் ஆங்காங்கே உள்ள சிப்பந்திகள், கணக்குப்பிள்ளைகள் ஒருங்கிணைந்து போராடி, போராடி வெற்றி பெற்றதன் விளைவாகவே, 1948 இல், தமிழ்நாட்டில் ஷாப் ஆக்ட் என்று சொல்லப்படும் வர்த்தக கடை சட்டம் உருவானது என்று

சொல்லி முடித்தார் பாண்டியன்.

ஒரு சில கடைகளை தவிர, பெரும்பாலும் ஞாயிற்றுக்கிழமை விடுமுறை அளிக்கும் நிறுவனங்களே அதிகமாய் இருந்தது.

தற்போது நிலைமை பழைய காலம் நோக்கி திரும்புகிறதோ என்று எண்ணவைக்கிறது.

மாநிலத்தில் தொண்ணூற்று ஐந்து சதவீத கடைகள் ஞாயிறு அன்று திறந்தே இருக்கின்றன. சிப்பந்திகளுக்கு சுழற்சி முறையில் வார விடுமுறை அளித்து விட்டு, எல்லா நாட்களுமே வேலை நாட்கள் போல கடைகள் திறந்துள்ளன. (மாதத்தின் முப்பது நாட்களுமே வேலை பார்க்கும் சிப்பந்திகள் உள்ள கடைகளும் உள்ளன. குறிப்பாக பெண்கள் பணிபுரியும் கடைகள்)

தொழிலாளர் நலத்துறை என்றொரு துறை இருந்தபோதிலும், இந்த நிறுவனங்கள் வார விடுமுறை, குறைந்தபட்ச கூலி போன்றவற்றை எல்லாம் காற்றில் பறக்க விட்டு விட்டு, எவ்வளவு அபராதம் என்று கேட்டு அவற்றை கட்டி விட்டு தங்களின் ஏவாரத்தை நன்றாக நடத்திக்கொண்டிருக்கிறார்கள்.

தற்போது, ஒரு கடையை 24 மணிநேரமும் திறந்திருப்பதற்கு விசேஷ அனுமதியை அரசிடம் வாங்கியிருப்பதாகவும் சொல்கிறார்கள்.

பெரிய பெரிய கார்பொரேட் நிறுவனங்கள், மால்கள், சூப்பர் மார்கெட்டுகள் வந்தபிறகு, லாபம் மட்டுமே ஒரே சிந்தனை என்றபிறகு, சிப்பந்தி உயிர் வாழ்வதற்கும், கடையில் ஜீவனோடு அங்குமிங்கும் நடப்பதற்கு தேவையான சக்தியை தரும் அளவிற்கான ஊதியத்தை தந்து விட்டு, (உங்கள் வீட்டு திருமணம் போன்ற நிகழ்வில், தனியாக மனமுவந்து பத்தாயிரம் ரூபாயை சுளையாய் முதலாளி அன்பளிப்பாய் வழங்குவார்) வேலை வாங்கும் நிலைமை உருவாகி விட்டது.

ஞாயிற்றுக்கிழமை மூடிய கடை வாசல்கள் பார்த்து நாளாகி விட்டன.

இருபத்திநான்கு மணிநேரமும், கண்கள் கூசும் ஒளிவெள்ளத்தில் நகரங்கள்,சிறு நகரங்கள் ஜொலிக்கின்றன.

சென்ற நூற்றாண்டின் கதை சொன்ன பெரியவர் எம்.பாண்டியன் போன்றவர்கள் இறந்து போனார்கள்.

ஞாயிறு சந்தோசத்தின் அடையாளமாய் இருந்த காலம் போய்விட்டது.

உங்கள் ஊரில் எப்படி? •

# நிழற்பறவைகளின் ராஜகோபுரங்கள்

மழை ஓய்ந்த ரசவாதைகளாய்
நீரின் காதல்
பூமியின் அகண்ட
ஈரப்பாத்திரத்தில்
வானத்தின் மாயத் துயரமென
சிந்திக் கொண்டிருக்கிறது
வேலி தாண்டியும்
முற்றத்துப் புற்களின்
கொண்டையில் வேப்பம்பூக்கள்
விழுந்து விழுந்து
சிரித்துக் கிடக்கின்றன
நட்சத்திரங்கள் உதிர்ந்த
இரவுப் படுக்கைகளை
கிழித்து நிழற்பறவைகள்
வலசை கடக்கின்றன
ஏகலைவ விரல்கள் பாதம் நீவி
பரந்த வருடலில்
குயிலிறகெடுத்து
காது துழாவுகிறேன்
மடி கனக்க கன்று நீவ
நாக்குச் சுழற்றிய தாய்ப்பசுவில்
நிரவிக் கிடக்கிறது
குழந்தைப் பசி
பவள மல்லிகை
கவிழ்ந்து வீழ்ந்ததால்
நறுமணம் நசிந்து போகுமா என்ன
பூமிப்பிரவேசம் மரத்தின்
அடியில் தான் என்கிறேன்
என் உலகைப்
பிடுங்கிக் கொள்கிறாய்
புறாக்களுக்காகத்தானே
கட்டப்பட்டிருக்கின்றன
ராஜ கோபுரங்கள்.

– தமிழ் உதயா.



# துரோகத்தின் நாக்குகள்

வித்தியாசமான வடிவமைப்புடையது
சில சமயம் கத்தியைப் போன்ற கூர்மையாக
சில சமயம் தோட்டாக்களைப் போல் உருளையாக
ஏனெனில் அதன் இலக்கானது
ஓர் உயிர் இல்லை
அதனினும் பெரிய ஒன்று
அதை வலி வேதனை என்றெல்லாம் வகைப்படுத்த முடியாது

துரோகத்தின் நாக்குகள்
எரிந்து அடங்காத கங்கிற்குள்
கொழுப்புகள் வடிய வாட்டப்படும்
வளர்ப்பு பிராணியின் முகச்சாயலை போன்றது
ஒவ்வொரு துளியிலுமிருந்து ஒரு வாடை கிளம்புமே
அதை நுகர்வதற்கு பதில் ஈரக்குலையை இறுக்கிவிடலாம்

துரோகத்தின் நாக்குகளால்
அதன் தொண்டையை தாண்டிக் கூட வெளியேற இயலாது
ஏனெனில் மிடறு விழுங்கும் பகுதியில்
சப்பாத்திக்கள்ளிகளை நட்டு வைத்திருப்பார்கள்
உங்கள் மேல் அண்ணம் ஒட்டி உலர்ந்தாலும்
அவற்றின் வேர்கள் விடுவதாகயில்லை

துரோகத்தின் நாக்குகள்
விஷ விதைகளை பாக்கெட்டில் நிரப்பிக்கொண்டு
நண்பனின் வீட்டிற்கு விருந்திற்கு போவதை போன்றது
அது அடிக்கடி
எதிரில் இருப்பவர்கள் எதிரிகள் இல்லை
என்று சொல்லிக்கொண்டு இருக்கும்
துரோகத்தின் நாக்குகள்
தனது பச்சை தேகத்தின் மீது
பரிதாப தோல் போர்த்திக்கொண்டு
ஆடை அணிவகுப்பு விழாக்களுக்கு சென்றுவரும்

துரோகத்தின் நாக்குகள்
ஒரு ஈர முத்தம் உலர்வதற்கு முன்னமே
இன்னொரு இதழின் லிப்ஸ்டிக் கறைகளை
துடைக்க தொடங்கியிருக்கும்
தனது இந்த செயலுக்கு விலையாக
ஒரு புரட்சிக்காரனின் வார்த்தைகளை
தற்காலிகமாக களவாடி
தனது குரலில் அதை ஒலிக்கவும் செய்திருக்கும்

துரோகத்தின் நாக்குகள்
சுவர்க்கோழிகள் கிரீச்சிடும் நடுநிசியில்
யாரும் அறியவில்லை என்ற பொய் நம்பிக்கையில்
ஒரே ஒரு முறை
தனது பாவமன்னிப்புகளை கேட்பதற்காக
மண்டியிட்டு அழுதுகொண்டேயிருக்கும்
ஆனால்
அது ஒரு வெற்று க்ராவல் மட்டுமே

# வேணி என்பவள்

வேணி என்பவள் யார்? என்று கேட்டால்
அந்த சாமியின் கொடுப்பினை என்று
இப்போது சொல்வார்கள் அவள் ஆத்தாளும் அப்பனும்.

வேணி என்பவள் யார்? என்று கேட்டால்
எங்க ஊரு பொண்ணு என்று பெருமையோடு சொல்வார்
பஞ்சாயத்து தலைவர் காத்தமுத்து அய்யா.

வேணி என்பவள் யார்? என்று கேட்டால்
என்னோட மாணவி என்று கொண்டாடுவார்
ரிட்டயர்ட் ஹெட்மாஸ்டர் எட்வின் சார்.

வேணி என்பவள் யார்? என்று கேட்டால்
ஐ.ஏ.எஸ். தேர்வில் மாநிலத்திலேயே முதல் ரேங்க்
என்று சொல்கின்றன நாளிதழ்கள்.

வேணி என்பவள் யார்? என்று கேட்டால்
என்னோட கள்ளிப்பாலுக்குத் தப்பிப் பிழைத்தவள் என்கிறாள்
கருப்பாயிக் கிழவி.

– சா.நாதன் ரவிகுமார்,

# தமிழுக்கும் அமுதென்று பேர்...!

*சிலம்பின் இளங்கோ*
*விளம்பிய வரிகள்*
*களத்தினில் நின்றால்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*கவியரசு கம்பனின்*
*புவியாளும் சொற்கள்*
*செவிதனில் விழுந்தால்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*பாவேந்தர் கூத்தரின்*
*மூவேந்தர் உலாவினுள்*
*பூவேந்தி வலம்வந்தால்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*வியங்கொண்ட பரணியின்*
*ஜெயங்கொண்டார் துள்ளலில்*
*மயங்கிநிற்கும் பொழுதுகளில்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*களம்காணும் புறமும்*
*காதல்காணும் அகமும்*
*கொட்டுகின்ற கற்பனைகளில்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*பேசுகின்ற தெய்வமாய்*
*வீசுகின்ற தென்றலாய்*
*பாசுரங்கள் வருடலில்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*பாரதியோடு தாசனும்*
*கண்ணனின் தாசனும்*
*கண்களில் நிற்கையில்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*அண்ணாவின் குரலோசை*
*ஆர்ப்பரிக்கும் நொடிகளில்*
*ஒலிப் பெருக்கிச் சொல்லிடும்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***

*அத்தனைக்கும் மேலாக*
*ஒருவயது மழலைதன்*
*திருவாய் மலர்ந்துநல்*
*'அம்மா'வென் றழைத்தால்*
***தமிழுக்கும்***
***அமுதென்று பேர்!***



**– பாப்பாக்குடி இரா.செல்வமணி.**

*இராகுகாலம் மரணயோகமென*
*நல்ல காலம் தேடுகின்றார்கள் ...*
*இருண்டது எதிர்காலம்!*

*காலப் பாத்திரம்*
*காலியாகாது ...*
*திருப்பி வைக்கப்படும் !*

**– கா.ந.கல்யாணசுந்தரம்**

# முத்தச் சரித்திரம்!

*இதயத்தின்*
*நான்கு அறைகளிலும்*
*சேமித்து வைத்திருக்கிறேன்*
*உன் முத்தங்களை!*

*அவ்வப்போது*
*ஒவ்வொன்றாக*
*எடுத்துப் பார்ப்பேன்*
*உன்மத்தம் தரும்*
*உன்முத்தங்களை!*

*இதயப் பெட்டகத்தின்*
*நடுநாயகமாய் இருக்கிறது*
*நடுக்கத்துடன் நீதந்த*
*முதல் முத்தம்!*

*மதுப் போதையாய்க்*
*கிறங்கடிக்கிறது*
*நம் திருமணம்*
*உறுதிசெய்யப்பட்ட நாளில்*
*தந்த மகிழ்ச்சி முத்தம்!*

*உயிரமுதம் கடைந்து*
*தேனெச்சில் பிழிந்தத்*
*தித்திப்பாய் இன்னும்*
*வழிந்துகொண்டிருக்கிறது*
*நம் முதலிரவு முத்தம்!*

*முதல் பிரசவத்திற்குச்*
*செல்லுமுன் நீ தந்த*
*கண்ணீர் முத்தத்தின் ஈரம்*
*இன்னும் காயாமலேயே....!*

*ஆனாலும் அழுத்தமாய்*
*மிகஅழுத்தமாய்ப் பதிந்து கிடக்கிறது*
*ஒரு கோபப் பொழுதில்*
*நீ கொடுத்த கடிமுத்தம்!*

**– வெற்றிப்பேரொளி**

# சொந்தமாய் வந்த மழை!

*ஓடிப்போய் மரத்தடியில்*
*ஒதுங்கிய எனக்குக் ஓரிரு பழங்களைப்*
*பறித்துப் போட்டது மழை!*

*பழங்களைப் பறித்துப் போட்ட மழை*
*பக்கத்தில் இருந்த பூக்களை நனைத்து*
*வேடிக்கைக் காட்டியது*

*வேடிக்கைக் காட்டிய மழை*
*நீயும் வாயேன் கொஞ்சம் நனையலாம்*
*என்று கையைப் பிடித்து இழுத்தது!*

*அப்புறம் என்ன?*
*மழையில் நானும் என்னில் மழையும்*
*ஒன்றாய் நனைய என்னில் நனைந்த மழை*
*என்னைப் பின் தொடர்ந்தது!*

*என்னைத் தொடர்ந்த மழை*
*வீடுவரை வந்து விட்டது!*

*வீடு வரை வந்த மழை*
*வீட்டுக்குள்ளும் நுழைந்து விட்டது!*

*என் தலையைத் துவட்டி விடுகிறேன்*
*என்று இன்னும் கொஞ்சம் அன்பில்*
*ஈரமாக்கி விட்டுச் சிரித்தது!*

*ஈரமாக்கிச் சிரித்த மழை*
*போய் வரவா என்றது!*

*வழியனுப்பலாம் என வாசலுக்கு வருகையில்*
*எங்கோ போய் ஓடி ஒளிந்து கொண்டது!*

*ஏமாற்றத்தோடு உள்ளே வருகையில்*
*என்னைப் பிரிய மனமின்றி*
*ஓட்டைக் கூரை வழியே கொஞ்சமாய்*
*ஒழுகிக் கொண்டிருந்தது*
*எனக்குச் சொந்தமாய்*
*வீட்டுக்கு வந்த மழை!*

**–து.வி.அன்பழகன்**

கருப்பாக வாயில் எதையோ
கவ்வி ஓடுகிறது தெருநாய்.

‘சிறகு வெட்டிய கிளியோ?’
கூண்டைப் பார்க்கிறான் ஜோஸ்யக்காரன்.

‘அவித்த சீனிக்கிழங்கு குறைகிறதா?’
விரித்த சாக்கைப் பார்க்கிறாள் சடைச்சி.

‘வலது பக்க மார்பாக இருக்குமோ?’
அவசரமாக மூடுகிறாள் கைபேசிப் பெண்.

பொதுமருத்துவ மனை சன்னலில் நிற்பவர்
ரொட்டியின் இருப்பை உறுதி செய்கிறார்.

திருவோட்டுச் சில்லரை எண்ணிப் பார்க்க
அவசரப் பீடியை அணைக்கிறார் சாமியார்.

போக்குவரத்துக் காவல்காரர் குனிந்து
பூட்ஸ் கால்களைப் பார்த்துக் கொள்கிறார்.

கழுத்தை நீட்டித் தரையில் படுத்திருந்த அது
விசையாகக் கல்லெறி விழுந்த பதற்றத்தில்
ஓட்டம் எடுக்கையில் பிசகாக வாயில்
ஒட்டிக்கொண்ட அதன் கிழிந்த நிழலை
உதறிக்கொண்டு இருந்தது வேறொரு வெயிலில்.

★★★

# கல்யாண்ஜி கவிதைகள்

வெள்ளம் புரட்டிவந்த நன்னீர் ஆமை
சூளை இடுக்கில் பதுங்கிய இரவில்
கருப்பந்துறைச் சிதை எரியும் தீயில்
கண்டறியாதன கண்டபடியே
அசையாதிருந்தது அசையும் மழையில்.
கல்மண்டபங்கள் முங்கிச் சீறும்
செம்புலப் பெயல்நீர் தீரா அழைப்பில்
ஒடுக்கம் கலைத்து மறுபடி நகர்ந்து
பின்னால் திரும்பிப் பாயும் ஆறு ஒன்றின்
புனலுள் தன்னைப் புகுத்திக் கொண்டது.

★★★



அது பறந்து விடுவதற்கு முன்
திறந்துவிட நினைத்தேன்.

நான் திறந்துவிடும் முன்
அது பறந்துவிட நினைத்தது.

நான் திறந்துவிடவும் இல்லை.
அது பறந்துவிடவும் இல்லை
இது வரை.

★★★



பரணில் கிடந்தவை எல்லாம்
பழைய கருப்பு வெள்ளைப் படங்கள்.

அவரவர் கையில் கிடைத்ததை எடுத்து
காட்டிக்கொள்கிறார்கள் அதனதன் நினைவுடன்

இரண்டாம் பேற்றுக்கு வந்த மகளும்
வெறும் தரையில் படுத்திருக்கிற அம்மாவும்.

ஒரு படத்தைக் காட்டிச் சிரிக்கிற மகளுடன்
அம்மாவும் சேர்ந்து நரைத்துச் சிரிக்கிறாள்.

இன்னொரு படத்தை மகள் ஒளித்துவைப்பதை
பார்க்காதது போலத் திரும்பிய அம்மா
‘அடுப்பில் வேலை இருப்பதாய்’ச் சொல்லி
அழுகையைத் துடைக்க எழுந்து போகிறாள்.

★★★



# நான்கு கவிதைகள்

வரிகளில் ஒட்டியிருக்கும்
உணவுத் துணுக்குகள் பார்த்து
வசமாய் வந்து
மாட்டிக் கொள்ள வாசகன் அமைந்ததும்
கடவுள் விதித்தூண்டிலைத்
தூர எறிந்து விட்டான்
வாழ்க்கையைப் பிடிப்பதாக அதைத்
தூக்கிச் சுமக்கிறார்கள் கலைஞர்கள்

கேட்டு வாங்கும் கவிதைகள்
நன்றாய் அமையாதது போல
வழிகாட்டி பின்னால் சென்றால்
வாய்க்கவே வாய்க்காது
நல்ல சிற்பங்கள் பார்க்க

தாங்கள் அடுப்பில் உறங்கிய
கதகதப்பான
பழைய கதைகளைத்
தாய்ப்பூனைகள் உற்சாகமாய் சொல்லுகின்றன
போம்மா அடுப்பாவது சாம்பலாவது
உடலை நீட்டி
முறுக்கிக் கொட்டாவி விட்டு
புணர்ச்சி தேடிப்போகின்றன
யாரும் சொல்லித்தராமல்
புதிய குட்டிகள்

மீனுக்கு எழுத்துகள்
கற்றுக் கொடுக்கலாமென்றால்
ஒத்துழைக்க மறுக்கிறது
ஓடும் நீர்



கலாப்ரியா

→ கட்டுரை

# டான் பிரவுனின் ‘ஆரிஜின்’

• ஷான்

டான் பிரவுன் புதினங்கள் பெரிதும் பேசப்படக் காரணம் உண்மைக்கு மிக அருகில் ஆனால் கற்பனையான பெரிய சாகசங்களுடன் எழுதப்படும் தனித்தன்மைதான். அவருடைய கதையில் வரும் இடங்களும் வரலாற்றுக் கட்டிடங்களும் ஓவியங்களும் உண்மையானவை. அவற்றின் பின்னணித் தகவல்களும் உண்மையானவை. படிக்கும் போது கூடவே கூகுள் செய்து பார்க்கலாம். அவர் சொல்லும் பல விவரங்கள் ஏற்கனவே இணையத்தில் கிடப்பவைதான். ஆனால் நம் கண்களுத்தான் தட்டுப்பட்டிருக்காது. பெரும்பாலும் மதத்துக்கும் அறிவியலுக்குமான ஒரு போராட்டமாகவே அவருடைய கதைக்களன்கள்அமைந்திருக்கும். அதை வரலாற்றின் சுவடுகளிலிருந்து தோண்டி எடுத்து அவர் கட்டமைக்கும் விதம் மிகவும் பிரமாண்டமானது. அவருடைய டாவின்சி கோட் இயேசு கிறிஸ்துவின் கன்னித்தன்மை குறித்த கேள்வியை எழுப்பியதால் பெரும்



சர்ச்சைக்குள்ளானது. இந்தியாவில் தமிழ்நாடு உள்ளிட்ட மாநிலங்கள் அந்தப் படத்தைத் திரையிடுவதை தடை செய்தன.இந்தத்தடைகளும் எதிர்ப்புகளும் அவருக்கு மேலும் புகழையே கொண்டு வந்தன.ஏஞ்சல்ஸ் அண்ட் டீமன்ஸ் உட்பட நான்கு புத்தகங்கள் அதற்கு முன்பாகவே வந்துவிட்டாலும் டாவின்சி கோட் வெற்றிக்குப் பிறகுதான் டான் பிரவுன் பெரிதும் கவனிக்கப்பட்டார். அவருடைய நாவல்கள் 56 மொழிகளில் வெளியாகியுள்ளன. 200 மில்லியன் பிரதிகள் அச்சிடப்பட்டுள்ளன. திரைப்படத்துக்கான உரிமை முன்கூட்டியே விலை பேசப்படுகிறது. எனவே அவருடைய கதைகள் என்றால் பெரிய எதிர்பார்ப்பு கிளம்புவதில் எந்த ஆச்சரியமும் இல்லை. அந்த எதிர்பார்ப்புக்கான தீனியை அளிக்கும் சவால் அவர் முன்பாக ஒவ்வொரு முறையும் வைக்கப்படுகிறது.

டாவின்சி கோட் புகழுக்குப் பிறகு வெளியான தி லாஸ்ட்சிம்பல் ஃப்ரீமேசன்ஸ்




என்று அழைக்கப்படும் உலகளாவிய ரகசியக் குழுவினரைப் பற்றியது. அவர்களது மரபுகள், விதிமுறைகள், உறுப்பினர் சேர்க்கை என்று அந்தக் கதையில்படிக்கப்படிக்க சுவாரசியமாக இருக்கும். அந்தக் குழு இந்தியாவிலும் ஏன் சென்னையிலும் கூட இருக்கிறது என்று தெரிய வரும்போது அது வியப்பாக மாறும். அந்த வியப்புதான் டான் பிரவுனின் வெற்றி. அவரது புதிய நூலானஆரிஜின் நூலும் அந்த வியப்பை நம் வாசிப்பினூடே தொடர்ந்து அளித்துக் கொண்டே செல்கிறது. இந்த முறை அவர் கையில் எடுத்திருப்பது மனித இனத்தின் தோற்றம் குறித்த கோட்பாடுகளை. மனிதன் எப்படித் தோன்றினான் என்ற கோட்பாடு ஒவ்வொரு மதத்திலும் அடிப்படையான ஒன்று. அந்த அடிப்படையில்தான் கடவுளின் கட்டுமானம் எழுப்பப்பட்டிருக்கிறது. கடவுள்தான் மனிதனைப் படைத்தார் என்று மனிதன் நம்பும் வரைதான் அவர் கடவுள். கணினிகளின் சிந்திக்கும் திறன் மனிதனை விட அதிகரிக்கும்போது அந்த செயற்கை நுண்ணறிவின் துணைகொண்டு நாம் இதுவரை நம்பிவந்த அறிவியல் கோட்பாடுகளை முற்றிலும் புதிய வழி முறைகளில் உறுதிப்படுத்தவோ தகர்க்கவோ செய்யும். இதுதான் ஆரிஜின் கதையின் அடிப்படை.

உலகம் தட்டையானது, பூமிதான் பிரபஞ்சத்தின் மையம் என்பது உள்ளிட்ட பல நம்பிக்கைகளைக் கேள்விக்குள்ளாக்கியது போலவே கடவுள்தான் மனிதனைப் படைத்தார் என்ற நம்பிக்கையையும் முதன்முதலில் கேள்வி கேட்டது விஞ்ஞானம்தான். ஆய்வுகளின் மூலம் ஓரளவு அதை உடைத்தவர் சார்லஸ் டார்வின். அவருடைய பரிணாமக் கொள்கை கிறிஸ்தவ மதக்கோட்பாடுகளின் ஆணிவேரை அசைத்துப் பார்த்தது. அதன்படி மனிதன் என்ற உயிரினம் யாருடைய தொடை எலும்பிலிருந்தும் ஒரே நாளில் தோன்றிவிடவில்லை. இயற்கையான சூழலில் நடந்த வேதிமாற்றங்களால் உருவான ஒற்றை செல் உயிரியானது தொடர்ந்த மாற்றங்களால் பல மில்லியன் ஆண்டுகள் உருமாறி பரிணாம வளர்ச்சி பெற்று மனிதனாக மாறியது என்பதை கிறிஸ்தவ மதம் ஏற்றுக்கொண்டால் பைபிளை மறுப்பது போலாகிவிடும். அறிவியலை ஏற்பதில் உள்ள சிக்கல் அது எல்லாவற்றையும் கேள்விக்குள்ளாக்கும். இது எல்லா மதங்களுக்கும் பொருந்தும். அப்படியே இருந்தாலும் ஆரம்பத்தில் அந்த ஒற்றை செல் உயிரியைப் படைத்தது கடவுள்தான் என்ற விவாதத்தை ஓரளவு சுதந்திர சிந்தனையுள்ள மதகுருமார்கள் தொடர்ந்து முன்வைத்தார்கள். அதை மறுப்பதற்கு ஐம்பூதங்களிலிருந்து வெறும் வேதியியல் மாற்றங்கள் மூலமாகவே ஒரு செல் உயிரியை உருவாக்க வேண்டியிருந்தது. அது அத்தனை எளிதல்ல.



மில்லர், ஊரி என்ற இரண்டு விஞ்ஞானிகள் சிகாகோ பல்கலைக்கழகத்தில் 1952ம் ஆண்டு பூமியில் உயிர்கள் தோன்றுவதற்கு முன்பிருந்த சூழலை ஒரு குடுவையில் உருவாக்கினார்கள். ஓரிரு வாரங்கள் தொடர் சோதனைக்குப் பின் உயிர்களின் அடிப்படையான அமினோ அமிலங்களில் ஐந்து வகையான அமிலங்கள் அந்தக் கலவையில் உருவாகி இருப்பதை உறுதிப்படுத்தினார்கள். ஆனால் அது உயிர்களின் உருவாக்கத்தை நிரூபிக்கப் போதுமானதாக இல்லை. ஓரளவு இடி, மின்னல், வெப்பம், கனிமம் ஆகியவற்றை வைத்து அந்த ஆய்வுச்சூழலை அவர்கள் உருவாக்கி இருந்தாலும் மனிதனால் உருவாக்கவே முடியாத ஒரு விஷயம் அந்த ஆய்வுக்குத் தேவைப்பட்டது. அது காலம். இந்தச் சோதனையை பல நூறு அல்லது ஆயிரம் ஆண்டுகள் தொடர்ந்து நடத்தினால் மட்டுமே ஒரு பாக்டீரியா போன்ற உயிரியை உருவாக்குவது சாத்தியம். ஆதியில் அப்படித்தான் நிகழ்ந்திருக்கும். ஆனால் குறுகிய காலத்தில் அமினோ அமிலங்கள் கிடைத்திருப்பது ஒரு நம்பிக்கையான ஆரம்பம். விஷயம் அத்துடன் முடியவில்லை. அந்த ஆய்வில் பயன்படுத்தப்பட்ட உயிர்க் கலவையை டென்வர் அறிவியல் காட்சியகத்தில் வைத்திருக்கிறார்கள். அந்தக் கலவையை 2007ம் ஆண்டில் விஞ்ஞானிகள் சோதித்தபோது 20 அமினோ அமிலங்கள் இருப்பதைக் கண்டறிந்தனர். அது மில்லர்-ஊரி கண்டறிந்ததை விட பல மடங்கு அதிகம். அப்படியானால் இன்னும் சில நூறு அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு

ஒரு டிஎன்ஏவைக் கட்டமைத்து ஒரு செல் உயிரி ஒன்றை உருவாக்கும் அளவுக்கு அதில் வேதி மாற்றங்கள் நடக்கலாம். அப்போது கடவுள்தான் உயிர்களைப் படைத்தார் என்ற கோட்பாடு உடையும்.

இந்த இடத்தில்தான் டான் பிரவுன் தனது கற்பனையைப் புகுத்துகிறார். செயற்கை நுண்ணறிவு படைத்த கணினிகளால் காலத்தை சிமுலேஷன் எனப்படும் மீயுருவாக்கம் செய்ய முடியும். மிகவும் சக்திவாய்ந்த கணினிகளைப் பயன்படுத்தி இந்த சோதனைகளை டிஜிட்டலாக நடத்தினால் மில்லியன் வருடங்களில் என்ன நடக்கும் என்பதை அவை பல கூறுகளையும் கருத்தில் கொண்டு கணக்கிட்டுத் துல்லியமாக சொல்லிவிடும். இது போன்ற ஒரு ஆய்வைத்தான் கதையில் வரும் இளம் கோடீஸ்வர விஞ்ஞானி எட்மண்ட்கிர்ஷ் செய்கிறார். இதன் மூலம் மதங்களே இல்லாத ஒரு எதிர்காலத்தை மனித இனம் பெறும் என்று நம்புகிறார். அதன் முடிவுகளை உலகிற்கு அறிவிக்க இருக்கும் சூழலில் மர்மமான முறையில் கொல்லப்படுகிறார். அவர் டான் பிரவுன் கதைகளின் நாயகனான ராபர்ட்லாங்க்டனின் நெருங்கிய நண்பர். அவருடைய ஆய்வு ரகசியத்தை வெளியே கொண்டு வரும் கடவுச்சொல்லைக் கண்டுபிடித்து அதை வெளியிடுவதுதான் அவருக்குச் செய்யும் சிறந்த அஞ்சலியாக இருக்கும் என்று நினைக்கிறார்கள் லாங்க்டனும் இன்னொரு தோழியான ஆம்ப்ராவும். ஆம்ப்ராவின் காதலர் ஸ்பெயினின் இளவரசர். வருங்கால மன்னர். கண்ணுக்குத் தெரியாத எதிரியுடன் நடக்கும் கண்ணாமூச்சி ஆட்டத்தில் ஸ்பெயினின் வருங்கால அரசியைக் கடத்தி விட்டதாக குற்றம் சாட்டப்படுகிறார் லாங்க்டன். மீதியை வெள்ளித் திரையிலோ ஒரு கிண்டில் திரையிலோ நீங்கள் பார்த்துக் கொள்ளலாம்.

இந்த முறை பாரம்பரிய ஓவியங்கள், வரலாற்றுக் கட்டிடங்கள், சிற்பங்களிலிருந்து திரும்பி பின் நவீன ஓவியங்கள், கட்டிடங்கள் பக்கம் கவனத்தைத் திருப்பியிருக்கிறார் டான் பிரவுன். கதையின் முக்கியக்களமாக இருக்கும் ஸ்பெயினின் குகன்ஹெய்ம் மியூசியம் பின் நவீனக் கலை வடிவத்தின் கோவில் என்று சொல்லலாம். அதன் கட்டிட அமைப்பு, அதன் தத்துவம், அதன் உள்ளே இருக்கும்

பாதிக்குமேல்தான் கதை கியர் மாற்றி வேகமெடுக்கிறது. அதன் பிறகான முடிவு எதிர்பார்க்காத தருணத்தில் வந்து அவ்வளவுதானா என்று கொஞ்சம் சிந்திக்க வைக்கிறது. இது தவிர வேறு எதுவும் குறைகள் இல்லாத வழக்கமான டான் பிரவுன் ரசிகர்களுக்கான விருந்து இது.

கலைப்படைப்புகள் என்று பல விஷயங்களை இந்த நாவல் தொட்டுச்செல்கிறது. அந்தக் கட்டிடம் நமக்கு எல்லாம் தெரிந்ததுதான். ஒரு கூடை சன்லைட் என்று ரஜினியும் ஷ்ரேயாவும்ஆடுவார்களே அதுதான். அது தவிர பார்சிலோனாவில் உள்ள ஆண்டோனியோ காடி என்ற கட்டிடக்கலை நிபுணர் மற்றும் சிற்பியின் படைப்புகள் மொத்தமும் இந்த நாவலில் வருகிறது. கட்டிடங்கள் அனைத்தும் இயற்கையான வடிவத்தில் இருக்கவேண்டும் என்ற கொள்கை உடையவர் அவர். கடல் அலைகள், மலைச் சிகரங்கள் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அவர் உருவாக்கிய கட்டிடங்கள் உலகப் புகழ் பெற்றவை. எந்த இடத்திலும் நேர்கோட்டிலான சுவர்களே இருக்காது. படிகள் கூட வளைந்து நெளிந்து பயமுறுத்தும். அவர் பெயரை கூகுள் செய்து பார்த்தால் உங்களுக்கு விளங்கும். அவரது இன்பெர்னோ கதையில் டண்டே வந்தது போல் இந்தக்கதையில் காடி திரும்பத் திரும்ப வருகிறார்.

கதையில் வின்ஸ்டன் என்ற கதாபாத்திரம் வருகிறது. லாங்க்டனை பல இடங்களில் வழி நடத்துகிறது. கேள்விகளுக்கு உடனே பதில் தருகிறது. ஓவியம் வரைகிறது. ஜோக் சொல்கிறது. ஆனால் அது மனிதனில்லை. செயற்கை நுண்ணறிவு படைத்த ஒரு கணினி. வேறு ஒரு காலகட்டமாக இருந்தால் இதை அறிவியல் புதினம் என்று சொல்லிவிடலாம். ஆனால் வின்ஸ்டன் அப்படி ஒன்றும் கற்பனை அல்ல. அது இன்றைய சூழலில் நிஜமாகவே நம்மிடையே உலவும் ஒரு பாத்திரம். ஆப்பிளில் அதற்கு சிரி என்று பெயர். கூகுள் அதை அஸிஸ்டண்ட் என்று அழைக்கிறது. ஒரு சராசரி மனிதனுக்குத் தெரியாத தகவல்கள் அவற்றுக்குத் தெரியும். இன்றைய சூழலில் செயற்கை நுண்ணறிவுத்துறை தினமும் வளர்ந்து கொண்டிருக்கிறது. ஏற்கனவே கணினிகள் கதைகள் எழுதத் தொடங்கிவிட்டன. ஓவியங்கள் வரையவும் கவிதைகள் எழுதவும் அவற்றைப் பழக்க முடியும். இனிமேல் சுயமாக சிந்திக்கும் இயந்திரங்களை நாம் அறிவியல் புதினங்களில் இல்லாமல் வழக்கமான கதைகளிலேயே பயன்படுத்த வேண்டிவரும்.

டான் பிரவுன்கதையின் வழக்கமான வேகம் இந்தக்கதையில் கொஞ்சம் குறைவுதான். எட்மண்ட்கிர்ஷ் தனது கண்டுபிடிப்பை வெளியிடும் ஆரம்ப கட்டங்களில் அத்தியாயத்துக்கு அத்தியாயம் அதீதமான பில்டப் கொடுத்து ஓகே பாஸ் மேட்டருக்கு வாங்க என்று சொல்லும் அளவுக்கு அயர்ச்சியை ஏற்படுத்திவிடுகிறார். பாதிக்குமேல்தான் கதை கியர் மாற்றி வேகமெடுக்கிறது. அதன் பிறகான முடிவு எதிர்பார்க்காத தருணத்தில் வந்து அவ்வளவுதானா என்று கொஞ்சம் சிந்திக்க வைக்கிறது. இது தவிர வேறு எதுவும் குறைகள் இல்லாத வழக்கமான டான் பிரவுன் ரசிகர்களுக்கான விருந்து இது. அவரது எல்லா நாவல்களையும் போலவே இந்தக்கதையிலும் வரலாறு இருக்கிறது, கட்டிடக்கலை, ஓவியம், சிற்பங்கள் குறித்த நுணுக்கமான விவரங்கள் இருக்கின்றன. அவற்றைக்கதையுடன் சாமர்த்தியமாக இணைக்கும் டான் பிரவுனின் புத்திசாலித்தனம் இருக்கிறது. கதையில் வரும் அத்தனை இடங்களுக்கும் இனி சுற்றுலா செல்பவர்களின் எண்ணிக்கை குறிப்பிடத்தக்க அளவு அதிகரிக்கும். அருகி வரும் வாசிப்புப்பழக்கத்தை மீட்டுக் கொண்டு வரப்பாடுபடும் எழுத்தாளர்கள் வரிசையில் டான் பிரவுன் மிகவும் முக்கியமானவர். 2005ம் ஆண்டில் உலகின் மிகவும் செல்வாக்கான 100 நபர்களில் ஒருவராக டைம் இதழால் பட்டியலிடப்பட்டார். மதம், வரலாறு, கலை, அறிவியல், இலக்கியம், சுற்றுலா என்று பல துறைகளில் ஆதிக்கம் செலுத்தும் எழுத்து அவருடையது. அந்த விருதுக்குத் தான் முற்றிலும் தகுதியானவர் என்பதை மீண்டும் ஒருமுறை ஆரிஜின் மூலம் நிரூபித்திருக்கிறார் டான் பிரவுன். •

# வெடிப்புக் காலம்

மயிலடையும் பனங்காட்டில்
பதனி இறக்குபவன் ஒற்றைக் குடிசையில்
மினுங்கும் சிம்னி விளக்காய்
நமக்கிடையில் தனிமை பிரகாசித்துக்
கொண்டிருந்தது
தூரத்துப் பனை ஓலை
நம் கிசுகிசு ரகசியப்பேச்சைத்
தட்டி போல் மறைத்து நின்றது
நிலவின் ஒளியில் நீண்ட சர்ப்பமென
ஒற்றையடிப் பாதை நம்மைக் கடந்து
போயிருந்தது
ஊர் விட்டு ஊர் போய்த்
தன் காதலனைத் தரிசித்து விட்டு
முக்காடிட்டு வந்த இளந் தாயின்
களவின் வாசனை காற்றில் மிதந்து
நம்மைக் கடந்து போனது
ஊருக்கு வெளியே காவலிருந்த
அய்யனாரின் வீச்சரிவாள்
காற்றில் அசையும் கிளைகளின்
விலகலுக்கு ஏற்ப விட்டு விட்டு
மினுங்கிக் கொண்டிருந்தது
வேலிக்கருவைத் தூரில்
முனகிய எலியின் கிரீச்சிடல்
பாம்பிடம் அதன் தலைமாட்டிக்
கொண்டதைப் பறைசாற்றியது
வலதும் இடதுமாய் உயர்வு தாழ்வு
பிளிற்றும் ஊர்கள் மௌனத்தில்
உறைந்திருந்தன
கருத்த சுடலையுடன் எல்லாம்
முடிந்தொருத்தி
எழுந்து போன போது எத்திசையில்
போனாள்
என்பது மர்மமாயிருந்தது
இருள் அவளுக்குக் காவலிருந்தது
ஒரே ஒரு முறை அவளின் ஒற்றை
மூக்குத்தி குலுங்கிச் சிரித்தது
வெடிப்புக் காலம் வந்த போது
அந்தப் பாத்தியின் பருத்திகள் மட்டும்
மற்றெல்லாவற்றையும் விட
அதிகப்பிரகாசமாய்ச் சிரித்துக்
கொண்டிருந்தன.

– சூரியதாஸ்

• எஸ்.சங்கரநாராயணன், ஓவியம்: ஜீவா

# புல்

ஊராட்சி ஒன்றியக் கட்டடம் எப்பவுமே திருவிழாக் கோலம் கொண்டிருந்தது. ஆட்கள் வருவதும் போவதுமாக வாசல் பரபரத்துக் கிடக்கும். கையில் குழாய் போல பேப்பரைச் சுருட்டியபடி யாராவது காத்திருப்பார்கள். பத்து தலை ராவணன் போன்ற அகல எடுப்பான கட்டடம். உச்சியில் பெரிதாய் 'தமிழ் வாழ்க' என்று எழுதியிருக்கும். காம்பவுண்டுச் சுவர் கோட்டு மீசை வைத்தா மாதிரி முன் எடுப்புக்கு மாத்திரம். சினிமாவில் இப்படிதான் செட்டு போடுவார்கள். முன்பகுதிக்கு மாத்திரம்... அதுவே சிதிலமடைந்து செங்கல் தெரிந்தது. சில இடங்களில் பிளவு விட்டு அதன் இடுக்கு வழியே செடி வெளியே எட்டிப் பார்த்தது. மூக்கு மயிர்கள் போல. தாண்டி சிறிது குழிவான பகுதியில் ஆலமரம் ஒன்று. விழுதுகள் பரவிய பெரிய மரம். ஊருக்கே அடையாளம் அது. அதுகொள்ளாத பறவைகள். பறவைகள் மரங்களை வளர்க்கின்றன. மரங்கள் பறவைகளை வளர்க்கின்றன. ஊரில் நிறைய ஆல மரங்கள். பெயரே ஆலங்கொட்டில்.

வாயிலில் பெயருக்கு ஒரு கிராதி இரட்டைக் கதவு. எப்பவோ திறந்தது மூடப்படவே இல்லை. கதவின் இரும்பைச் சுற்றி மண் மேடுதட்டி இறுகிக்கிடந்தது. இனி சாத்த முடியாது. கதவுக்கு உச்சியில் அரைநிலா போல போர்டில் 'ஆலங்கொட்டில் ஊராட்சி ஒன்றியம்' என அழிந்தா மாதிரி எழுத்துக்கள். கரகாட்டக்காரி வைத்த கனகாம்பரம் போல. தாண்டி உள்ளே வர வாகனங்கள் நிறைய நின்றிருக்கும். வந்தவரின் பவிஷுக்குத் தக்கபடி சைக்கிள். டிவியெஸ். ஸ்ப்ளெண்டர். ஆட்டோ. நான்கு சக்கரம். சற்று தள்ளி ஒன்றியத்துக்குச் சொந்தமான குப்பை வண்டிகள். தண்ணீர் கழிவுநீர் லாரிகள். தலைப்பா கட்டினாப்போல பெரிய தண்ணீர்த் தொட்டி. அதன் கீழேயே கல்யாண மண்டபத்தின் கையலம்பும் இடம் போல வரிசையாய்க் குழாய்கள்.

கவுன்சில் தலைவரின் கார் எண் ஊரில் எல்லாருக்குமே தெரியும். இந்தத் தேர்தலில் செயித்தபோது அவர், எப்படியும் சம்பாதிச்சிக்கலாம் என்ற நப்பாசையில் மாதக் கடனில் வாங்கிய கார். ஏனெனில் சத்தியமூர்த்தி, முந்தைய தலைவர், தேர்தலுக்கு சற்றுமுன் தான் கார் வாங்கினார். வரும் தேர்தலுக்கு முன் இருக்கிற நிதியை மக்களுக்கான சேவையில் அவர் செலவிட்டார். அவர் ஊருக்கு ரோடு போட்டார். ஓரங்களில் அரையடி அரையடி விட்டு அதையும் ரோடு போட்ட மாதிரி கணக்கு காட்டினார். கோடு போடச் சொன்னா ரோடு போட்டுருவான், என்பார்கள். இவர் ரோடு போடச் சொன்னா கோடு போட்டார். உச்சியில் மாத்திரம் முடி விட்டு மிலிட்டரி கட் கிராப் வெட்டிக்கொண்ட மாதிரித் தெரிந்தது ரஸ்தா. சத்தியமூர்த்தி ஒன்றியத்துக்கு புதிய லாரிகள் வாங்கினார். அதையெல்லாம் பார்த்தபடி புருசோத்தமன் பல்லைக் கடித்தபடியே காத்திருந்தார். அடங் நொய்யால, ஒரு ஒன்றியத்துல இத்தனை துட்டு இருந்தா, இனி மாநகராட்சி, எம்.எல்.ஏ., எம்.பி...ன்னா என்ன ஆறது? அடுத்த தேர்தலில் புருசோத்தமன் வெற்றி பெற்றார்... இனி கார்க் கடன் அடைக்க வேண்டும்.

நல்லாதான்யா பேர் வைக்கிறாங்க. சத்தியமூர்த்தி. புருசோத்தமன்.

புருசோத்தமனுக்குத் தொடுப்பு அன்னக்கிளி, என்று ஊரில் எல்லாரும் அறிந்திருந்தார்கள். பெரிய மனுசன் என்றால் அதெல்லாமும் வேண்டியிருக்கிறது. அன்னக்கிளிக்கு ஒரு தங்கை. சிவரஞ்சனி. கொஞ்சம் சிவப்பாய் இருப்பாள். அதனால் பெயர்ப் பொருத்தம். அக்காக்காரி போலவே தங்கையும் கெட்டிக்காரி. தங்கச்சிக்காரி சத்தியமூர்த்தியை வளைத்திருந்தாள். அதனால் சத்தியமூர்த்தி என்ன செய்தாலும் புருசோத்தமனுக்கும், புருசோத்தமன் என்ன செய்தாலும் சத்தியமூர்த்திக்கும் தெரிந்து விடுகிறது. பெண்களுக்கு தங்கள் சகவாசத்தையிட்டுப் பெருமையும், மத்தவளையிட்டுப் பொறாமையும் உண்டு. தங்கப்பல் கட்டினவ பக்கத்து வீட்டுக்குப் போய் 'இஞ்சி இருக்கா இஞ்சி'ன்னு கேட்டாளாம். அப்பதானே அவ கட்டின தங்கப்பல்லைக் காட்ட முடியும்? இதுக ரெண்டும் அந்தக் கேஸ். தம்பட்டப் பிரியம் உள்ளவர்கள். ஊரில் மத்த பொண்ணுகளே கூட அவர்களைப் பார்த்து வயிறெரிந்தார்கள்... இவளுகள் படுத்திய பாட்டில்தான் புருசோத்தமன் தேர்தலில் நின்றார் என்றுகூட ஊரில் பேச்சு உண்டு.



தேர்தலில் தோற்போம் என்று சத்தியமூர்த்தி எதிர்பார்க்கவில்லை. நல்லாதான் செலவு செய்தார். எல்லாவனும் வாங்கிக்கொண்டு புருசோத்தமனுக்கு ஓட்டு போட்டிருக்கானுகள். தேர்தல் அறிவிக்குமுன்னால் ரோடு போட அது இது என்று திட்டங்களைச் செயல்படுத்தியதில் கார் வாங்கினார். சிவாவுக்கு கழுத்தில் ஒரு சங்கிலி மினுங்கியது இப்போது அவள் அழகு எடுப்புகூடித் தான் போனது. அவள் நடையே சற்று துள்ளலாய் மாறியிருந்தது இப்போது.



ஆ தப்பு அங்கேதான். (இஞ்சி இருக்கா இஞ்சி.) அக்காக்காரிக்கு அதைப் பார்க்க சங்கிலி ஆசை வந்திருந்தது. புருசோத்தமன் நமக்கு எதுக்குப்பா கட்சியும் தேர்தலும் என்று இருப்பார். கட்சியில் மெம்பர் தான். நன்கொடை தருவதோடு சரி. மரக்கடை வைத்திருந்தார். கல்லாவைப் பார்த்துக் கொண்டால் போதும் என்று இருந்தவர். மரம் சும்மா இருந்தாலும் காத்து இருக்க விடாதுன்றா மாதிரி அன்னக்கிளியால் அவர் உலுக்கப் பட்டார்.

ஒன்றியத்தின் முன் பகுதி பெரிய பொட்டல். நடுவில் தேசியக் கொடி ஏற்றும் கம்பம். அதைச் சுற்றி வட்டமான சிமென்ட் மேடை. எல்லாம் காடென புதர் மண்டிக் கிடந்தது. அதை நாலு ஆள் போட்டு வழித்தெடுத்தார் சத்தியமூர்த்தி. அதில் ஒரு தளம் மாதிரி போட்டால் திரும்ப எதுவும் முளைக்காது, என ஒரு கணக்கு. அதற்குள் அதிகாரம் கை மாறி விட்டது. ஊருக்கு அவர் சேவை செய்யத் தயார்தான். கை நழுவி விட்டது வாய்ப்பு. இனி அஞ்சு வருசமோ அதுக்கு மேலேயோ. வருமோ வராதோ. இப்பவே நம்ம சைடுல இருந்தவன் நாலைந்து பேர் அங்க போயி "தலைவரே"ன்னு பொன்னாடை போத்தி இணைஞ்சிட்டான். சிவா ஆசையாய்க் கிட்டே வந்தபோது, "சனியனே, எல்லாம் உன்னாலதான்" என்றார் எரிச்சலுடன். என்றாலும் அந்தக் கோபம் நீடிக்கவில்லை. ரொம்ப எகிறினால் அப்பறம் அதைச் சமாளிக்க எஸ்ட்ரா செலவாயிரும். அந்த பயம் உண்டு அவருக்கு.

நீள எடுப்பில் இருந்த கட்டடத்தில் மேலும் அறைகள் கட்டி விரிவு படுத்துவதாக புருசோத்தமனின் திட்டம். பின்னே? மக்களுக்கு சேவை செய்வது இப்போது அவர் முறை. பின்பக்கம் வால் முளைத்தாப் போல கட்டடம் இப்போது ஒரு 'ப' வடிவம் பெற்றது. அதில் ஒரு நீண்ட அறை கவுன்சிலர்களுக்கானது. அதை ஒட்டினாப்போல சின்ன அறை. அதில் புருசோத்தமனின் உருப்படாத தம்பி ஒருத்தன் வந்து டீக்கடை போட்டான். பீடி சிகெரெட் சமோசா பிஸ்கெட் பாக்கு என உதிரி வியாபாரம். மலையாளி பேக்கரிக்காரன் ஒருத்தன் பெரிய டப்பாவைக் கட்டிக்கொண்டு சைக்கிளில் வந்து பிஸ்கெட், சமோசா ஐட்டங்கள் போட்டுவிட்டுப்

போவான். ரீஃபில் பேனா, கோர்ட் ஃபீ மற்றும் ரெவின்யூ ஸ்டாம்புகள் இங்கே கிடைக்கும். படிக்கையில் அவனோடு கூடவே படித்து கூடவே ஃபெயிலான ஒரு சிநேகிதன். அவனும் கூடவே இங்கே மனு எழுத என்று வந்து உட்கார்ந்து கொண்டான். படிக்காத பையன்கள் தான் நாட்டில் ஊள்ளூரிலேயே மக்கள் சேவை என்று அமர்கிறார்கள்.

வேற வழியில்லை.

புருசோத்தமனின் கட்சி கவுன்சிலர்கள் மெசாரிட்டி. நாற்பதில் அவர்கள் இருபத்திரெண்டு. இங்கேர்ந்து போய் ஜோதியில் ஐக்கியமானவர்கள் ஒரு நாலைந்து பேர், என புருசோத்தமன் என்ன தீர்மானம் கொண்டு வந்தாலும் செயித்தார். தேனைத் தொட்ட கை சும்மா இருக்காது. சத்தியமூர்த்தி எல்லாவற்றையும் இப்போது வேடிக்கை பார்க்கிறாப் போல அல்லவா ஆயிட்டது. “ஒன்றியக் கட்டடத்தை விரிவு படுத்தும் இந்தத் திட்டம், அதுவே நாங்கள் முன்னெடுத்தது தான்...” என்றெல்லாம் மேடை போட்டு அவர் பேசத்தான் முடியும். புருசோத்தமன் சாதித்துக் கொண்டிருந்தார். அட நாம பேசினாலும் கைதட்ட ஆர் இருக்கா? முதுகுக்குப் பின்னால் சிரிப்பாங்க.

சத்தியமூர்த்திக்கு சக்கரம் தளர்ந்து சுற்றுகிறதில் சிவா முகம் சிறுத்து விட்டது. அக்கா கை ஓங்கினாப் போல அவள் எடுப்பு குறைந்திருந்தது. அவள் ஒதுங்கி ஒதுங்கிப் போனாலும் அன்னக்கிளி அவளைக் கூப்பிட்டு வைத்து எதாவது பேசினாள். “நாளைக்கு நம்ம கோவில்ல கொடை இல்ல, எங்க அவருதான் விழாத் தலைமை” என அவளுக்குப் பெருமை. கட்டின பொண்டாட்டி கூட இத்தனை அலட்டிக்கலையடி யம்மா, என நொடித்தாலும் வெளியே சிரித்து வைத்தாள் சிவா.

ஒன்றிய வளாகம், பெரிய எல்லை அது. வாயில் கடந்து உள்ளே நெல்லடிக்கிற களம் போல ஏராளமான பொட்டல். இபபோது கட்டடம் பின்பக்கமாக ‘ப’ என வளர்ந்ததில் நடுவேயும் பெரும் சதுரமாய் அடைபட்டது. ஒரு மழை வரை பொட்டலில் பெரும் மாற்றம் இல்லை. வலப்பக்கம் தள்ளி நின்ற ஆலமரம். அதுவரை கரிசல் தரையாக சாக்கடை ஓடிக் காய்ந்த சாயலில் கிடந்தது பூமி. கோவில் கொடை முடியவும் பெய்த ஒரு மழையில் மனுசாளுக்குத் தாடி முளைத்தாப் போல ஒன்றிய முன் பகுதியிலும், கட்டடங்களுக்குள் அடைபட்ட வளாகத்திலும் புல் முளைக்க ஆரம்பித்தது.

முதல் தழையான புல் வெகு அழகானது. பச்சை அல்லாமல் ஒரு வெளிர் பசுமை அது. குமரிப் பெண்ணின் வசீகரம் அது. சூரிய வெளிச்சத்தை அது உள்ளே தக்க வைத்துக்கொண்டு பொன் மினுக்கங் கொடுத்தது. கறவை மாடுகளுக்குப் பிரியமான தீனி. இந்தப் பக்கம் வராமல் ஆடு மாடு மேய்ப்பவர்கள் தண்ணித் தொட்டி ஆலமரத்தடியோடு நின்று கொள்வார்கள். அந்தப் பக்கம் சுவரில் எல்லாம் கூட புசுபுசுவென்று கொடி மூடிக் கிடக்கும். செடிகொடிகளுக்கு இடையே நடமாடும் கரட்டாண்டிகளைக் கல்லால் அடிப்பார்கள். அது இடையன்களுக்குப் பொழுதுபோக்கு. மாடுகள் தன்னிச்சையாய் ஒன்றிய அலுவலக வாயில் மற்றும் உட்புற வளாகப் புல்லை மேய என்று வந்துபோயின. அது கறக் மொறுக் என்று புல்லை ஆர்வமாய்க் கடிக்கிற சத்தம் தெளிவாய்க் கேட்க முடிந்தது.

புல்லின் கொல்லென்ற வளர்ச்சி அழகு. இராப் பனியில் சிலிர்த்து விரைத்து நிற்கிற புல்லை காலையில் அலுவலகம் பரபரப்பாகும்வரை காண முடியும். நீர்முட்டையாய் தவளைக் கண் போல மினுங்கும் புல். ப-வின் இந்தப் பக்க அறையில் இருந்து ப-வின் அந்தப் பக்க அறைக்குப் போகிற ஆட்கள் புல்லை மிதித்து அந்தக் குளிரை உரசியபடியே போவார்கள். எங்கிருந்தாவது நாய் எதும் வந்தால் புல்லில் உருண்டு மல்லாக்க அப்படியே கிடந்து வாழ்க்கையை அனுபவித்தது. புல் எல்லாருடைய நல்லம்சங்களையும் மேலெடுத்து வருவதாய் இருந்தது.

அடுத்த மழையில் புல்லின் வளர்ச்சி உக்கிரம் பெற்றது. புல் தாள்கள் கடும் பச்சையாய் உடைவாள் என முகம் மாறின. அரையடிக்கு மேல் வளர்ந்து செழித்தது புல். இப்போது அதன் ஊடே புகுந்து கடப்பார் இல்லை. வராந்தாக்களில் நடந்தார்கள் ஊழியர்கள். வாயில் தாண்டிய முன் வளாகத்திலும் செழித்துக் கிடந்த புல் புதர்போல் உள்ளிருட்டு காத்தது. இரவுகளில் அதில் இருந்து சிறு பூச்சி, வண்டுகளின் இரைச்சல் கரன்டு டிரான்ஸ்ஃபார்மர் போலக் கேட்டது.

அடுத்த ஒன்றியக் கூட்டத்தில் சத்தியமூர்த்தி, “நிர்வாகத்தின் அலட்சியப் போக்கு கண்டிக்கத் தக்கது. இந்தப் புற்களையெல்லாம் உடனடியாக வெட்டி நிலத்தை சீர் செய்ய வேண்டும். நான் இருந்தபோது இந்த இடம் எத்தனை துப்புரவாக இருந்தது என்பது மக்களுக்கே தெரியும்...” என்றெல்லாம் ஆவேசப்பட்டார். இதை ஒரு விவாதப் பொருளாக எடுப்பார் சத்தியமூர்த்தி என புருசோத்தமன் எதிர்பார்க்கவில்லை. “ஆவன செய்யப்படும்” என ஒருவரி பதிலை மாத்திரமே அப்போது அவர் தந்தார்.

“ஆவன செய்யறதுன்னா என்னடி?” என்று சிரித்தாள் சிவா. “ஆனா இல்லாட்டி ஆவன்னா... செய்யப்படும்.” சிவா சிரித்தபோது கண்கள் அழகாக விரிந்தன. அன்னத்துக்கு அவள் கேலி செய்தது தாள முடியவில்லை. அதுவும் கழுத்துச் சங்கிலியை நிமிண்டிக்கொண்டே சிவா பேசியது தான் அதைவிடக் கொடுமை. இந்தாள் பதவிக்கு வந்து ஒண்ணேகா வருசம் ஆகுது, ஒரு குந்துமணி கண்ணுல காட்டியிருக்குமா? ஹ்ம். எதற்கும் அதிர்ஷ்டம் வேணும். ஆத்திரம் பூத்தாலும் வெளியே சிரித்து வைத்தாள் அன்னம்.

சத்தியமூர்த்தி தன் ஆட்களை வைத்து இந்தப் புல்லை தானே தன் சொந்தச் செலவில் சுத்தம் செய்வதாக அடுத்த ஸ்டண்ட் ஆரம்பித்தார். அதுவேறு புருசோத்தமனுக்கு ‘காண்டு.’ இதையெல்லாம் முளையிலலேய நிறுத்தணும், என எச்சரித்தது மனசு. சத்தமாய்ப் பேசிவிட்டார் போல. “கரெக்ட்டு. அதான், முதல்லியே இந்தப் புல்லை வெட்டியிருக்கணும்...” என்று கூட இருந்தவர் இவர் சொன்னது புரியாமல் பேசினார். ஆதரவாகப் பேசியதாகத் தான் அவர் நினைத்தார். அதுவேறு புருசோத்தமனுக்குக் கடுப்பேற்றியது.

பூச்சிகள் அடைய அடைய புல்வெளியில் தவளைகள் நடமாட ஆரம்பித்தன. சின்னதும் பெருசுமாய் பல்வேறு நிறங்களில் பழுப்பு கருப்பு பச்சை சிவப்பு என விதவிதமான தவளைகள். மடித்த நாக்கை நீ...ட்டி ‘கபடி கபடி’ என எல்லையைத் தொட்டு பூச்சிகளைப் பிடித்துச் சுவைத்தன தவளைகள். வராந்தாக்களில் வெளி வளாகங்களில் அவை சகஜமாய்த் துள்ளித் திரிந்தன. பச்சக் என்று துள்ளி சுவரில் போய் ஒட்டிக்கொண்டு அப்படியே கிடந்தன. இரவுகளில் அலுவலக சன்னல்களைப் பூட்டாமல் விட்ட ஒருநாள் அவை உள்ளேயும் வந்து அமக்களம் செய்யத் தொடங்கி விட்டன.

மணல் குவித்து மண்பானைத் தண்ணீர் வைத்திருக்கும் அங்கே. மண்பானைத் தண்ணீர் ஜில்லென்று தொண்டையில், அப்டியே உணவுக்குழாய் வழியே வயிற்றில் இறங்குவது குளுகுளுவென்று இருக்கும். ஒரு பெண் ஊழியர் தண்ணீர் குடிக்கப் போனால் அந்த ஈரமணலில் ஜம்மென்று அமர்ந்திருந்தது தவளை ஒன்று. அவளைப் பார்த்ததும் அப்படியே முட்டைக்கண்ணால் வெறித்தபடி தவளை தாடைச் சதையைத் தொங்கவிட்டு ஒரு ஆட்டு ஆட்டி திரும்ப உள்ளிழுத்துக் காட்டியது. தம்ளரை அப்படியே வீசிவிட்டு ஓடிவந்தாள் அவள்.

இன்னொருத்தி மேசைமேல் வைத்திருந்த காகிதக் கட்டில் பேப்பர் வெயிட் என்று கைவைத்தால் விசுக்கென துள்ளியது தவளை. பதறித் துள்ளி விலகினாள் அவள்.

கேன்ட்டீனில் சமோசா என்று தவளையை எடுத்து, நல்லவேளை கடிக்குமுன் கண்டுபிடித்தார்கள்.

**வானுறையும் தெய்வம்**

வானம் வழங்கும்
மழை கண்டோடி
ஒளியாது
உடன் செல்லும்
அனுபவம்
வானுறையும்
தெய்வத்தொடு
கொஞ்சம்
வாழ்தலன்றி
வேறென்னவாம்!

**– வளவன் கரிகாலன்**

சத்தியமூர்த்திக்கு இந்த சம்பவங்கள் பெரும் உற்சாகம் அளித்தன. இப்போது அவருக்கு அலுவலக ஊழியர்களின் ஆதரவு கிடைத்தாப் போலத்தான். இதைவைத்தே புருசோத்தமனை உண்டு இல்லைன்னு பண்ணிவிடலாம் என்று உற்சாகப்பட்டார் அவர்.

சிவரஞ்சனிக்கும் உற்சாகமாய் இருந்தது.

அவன் என்ன சொல்றது நாம என்ன கேக்கறது, என்ற பாணியில் புருசோத்தமன் மௌனம் காத்தார். பாக்கலாமே. நாம இப்ப மெசாரிட்டி. இவனுக என்னதான் கரடியாக் கத்தினாலும் காரியம் ஆவாது. என்ன செஞ்சிற முடியும் இவனுங்களால. “நான் பாத்துக்கறேன்” என்றார் அவர் அன்னக்கிளியிடம். அட இது ஒரு ஆம்பளைன்னுகிட்டு, என அன்னத்துக்கு ஏமாற்றம்.

ஒன்றிய வளாகத்தின் தள்ளி நின்ற ஆலமரக் குழியில் பெய்த மழைக்குத் தண்ணீர் கட்டியது. பிள்ளைகள் முட்டாழத் தண்ணியில் விளையாடின. இடையன்களுக்கு கும்மாளம் அடிக்கத் தோதாய் அமைந்தது அந்த ஆலமரத்தடி. விழுதுகளைப் பற்றியபடி அவர்கள் இங்கேர்ந்து அங்கே அங்கேர்ந்து இங்கே என ஆட்டம் போட்டார்கள். ஒருவன் தொங்க அடுத்தவன் வண்டி எங்க போவுது? - மருதை போவுது - போலா ரைட்ட்... என தள்ளி விட அவன் போகுமுன் டவுசர் நழுவி அவன் அம்மணமாய்த் தண்ணில போய் விழுந்தான். ஒரே வேடிக்கை.

அதில் ஒருத்தன் விழுது என்று தாவிப் பிடிக்க அது விழுது அல்ல. புஸ்சுனு ஒரு சத்தம். ஐயோ பாம்பு என குப்புற விழுந்து ஓடினான் அவன். நல்ல கதை. அன்னக்கிளிக்கு சிரிப்பு வந்தது.

புல் அல்ல புதர். இடுப்பு உயரத்துக்கும் தாண்டிவிட்டது புல். விட்டுவிட்டு மழை வேறு பெய்தது. ஒரு நாய் ஒளிந்துகொண்டால் கண்டுபிடிக்க முடியாது. அத்தனை அடர்த்தி. உள்ளிருட்டு. கொசுத்தொல்லை வேறு அதிகமாகி விட்டது. அலுவலர்களே முகம் சுளிக்க ஆரம்பித்து விட்டார்கள். அவர்களே ஒருநாள் தலைவர் முன்னால் கூடி தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்தார்கள்.

அப்போதும் புருசோத்தமனுக்கு, நிலைமை சத்தியமூர்த்திக்கு சாதகமாய் உருவோங்கி வருவதில் ஆத்திரம் தான் வந்தது. இரு. பதட்டப்படாதே. நமக்கு இல்லாத செல்வாக்கா? அவர் தனக்குத்தானே பேசிக் கொள்ள ஆரம்பித்திருந்தார். வேறு பெரிய திட்டங்கள் வைத்திருந்தார் அவர். வாசல் காம்பவுண்டுச் சுவரை இடித்துவிட்டு நல்ல சுவர் எடுப்பது. புதிய கிராதிக் கதவு போடுவது. முழு கட்டடத்துக்குமே திரும்ப வண்ணம் பூசுவது. இடையில் காந்தி பிறந்தநாள் விழா - இப்படி பரபரப்பாக எதாவது செய்வம், என்று இருந்தார். இதெல்லாம் பொம்பளையாளுகளுக்கு எப்பிடித் தெரியும். எல்லாத்தையுமா ஒரு ஆம்பளை சொல்லித் திரிவான். இதுங்களுக்கு என்ன தேவையோ அதத்தானே சொல்ல முடியும்?

ஒரே சமயத்தில் எல்லாத்துக்கும் கலெக்டரிடம் அனுமதி பெற முடியாது. “ஒண்ணொண்ணா செய்யிங்க. பசித்தவன் அந்தாக்ல வாய்ல சோத்த அடைச்சிக்குவானே, அதும் மாதிரி வேலை செய்யப்டாது,” என்பார் அவர். எப்படியும் அவருக்கும் ஒரு பங்கு நைவேத்தியம் காண்பிக்காமல் இல்லை. இருந்தும் அதிகாரியில்லா? விரைப்பு இருக்காதா?

பேரா? கலெக்டர் பேர் தர்மசீலன்.

பதவிக்கு வந்ததும் முதல் செலவாக ‘தலைவர் அறை’க்கு ஏ.சி. போட ஏற்பாடு மேற்கொண்டிருந்தார் புருசோத்தமன். ஃபைல் ஓகே ஆகி இப்பதான் வந்தது. கூடவே மாடியில் கவுன்சிலர்களின் கூட்டம் நடக்கும் அரங்கம், கீழே கவுன்சிலர்களின் ஓய்வறை என எல்லாத்துக்கும் ஏ.சி. பதினாலு சாதனங்கள் வாங்கப்பட்டன. இதெல்லாம் தனக்குத் தோணவில்லையே என்று சத்தியமூர்த்தி வயிறெரிந்த கணம் அது. அவர் வயிறெரிவார் என்பதில் புருசோத்தமனுக்கு அபார திருப்தி. ராத்திரி ஊரடங்கியதும் அவர் அன்னக்கிளியை வரச் சொன்னார். “எங்க?” என்றாள் அவள் சலிப்புடன். அஜித் படம், புதுப் படம் வந்திருக்கிறது. அவருடன் போனால் மேலே இருந்து பாக்கலாம். பாலும் பழமும்பாங்களே, என்ன அது, பால்கனி. அங்க தனி ரூம் தருவார்கள். தலைவருல்லா? எப்ப கூட்டிப் போவாரோ தெரியவில்லை.

கூர்க்காவுக்கு லீவு தந்து அனுப்பி வைத்தார்

## அந்நியோன்யம்

அந்நியோன்யம் சிதைந்த நொடியை
ரீவயிண்ட் செய்கிறா[ன்]ள்
வளர்ப்பு நாயின் குழைவு.. கொஞ்சல்களுடன்
கட்டத் தொடங்கியப்பாலம் இடிந்து வீழ்ந்தது
வெறிகொண்டத் தெரு நாயின் உறுமலொன்றில்
எந்தத் திசையிலும் அசையவியலாமல்
ஸ்தம்பித்தவ [ன்]ள் துப்பி உமிழ்ந்த எச்சிலின் துர்கந்தம்
இந்தக் கவிதை முழுதும்
சொற்களின் அதிர்வில் சூடானக் கைபேசி
அந்தரங்கத்தின் வண்ண ஓவியச்சீலைகள் கிழிந்து
கருந்திரையின் அந்தகாரத்தில் இருளான
அறையில் எங்காவது ஒட்டியிருக்குமோ சுகந்தத் துளி
அந்நியோன்யம் சிதைந்த அந்நொடிக்குப்பின்
தென்படுவதே இல்லை முற்றத்துப் புறாக்கள்.
சன்னல் வானம் வெறித்து
மவுனம் காப்பவ [ளை]னை புன்னகைக்கும்
காய்ந்த கழிவுகள்.

– அன்பாதவன்

புருசோத்தமன். ஓரளவு இருட்டு சேர்ந்ததும் காரை எடுத்தார். அவரே ஓட்டுவார். தெக்குத் தெரு தேர்முட்டி பக்கம் காத்திருந்தாள் அன்னக்கிளி. அந்நேரம் வரை குளிக்காதவள் அவசர அவசரமாய்க் குளித்திருந்தாள். உடல்தினவுடன் நல்ல ஸ்ருதியேற்றிய வீணையின் முறுக்கத்துடன் இருந்தாப் போலிருந்தது. குனிந்து அவள் உள்ளே ஏறியபோது அக்குள் பக்கமிருந்து பௌடர் வாசம் அடித்தது. ஞாயிறு இரவு. ஊரே டி.வியில் படம் பார்த்துக் கொண்டிருந்தது. அவ்வப்போது வீடுகளில் இருந்து பெரிதாய்ச் சிரிப்புச் சத்தம் கேட்டது. கவுண்டமணி வந்தாலே கிராமமே சிரித்துக் கொந்தளிக்கிறது. “எங்க போறம்?” என்றாள் அன்னக்கிளி ஓர் உல்லாசக் கிறக்கத்துடன். முன்சீட்டில் அவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். “சொல்றேண்டி என் தங்கக்கிளி” என்றார் அவள் கன்னத்தை வருடி. கன்னத்தில் கொசு மருந்து அடிச்சாப் போல பௌடர். மனம் தன்னைப்போல அவளையும் அவள் தங்கச்சியையும் ஒருசேரப் பார்த்தது. ஹ்ம், என முனகினார். தண்ணி போட்டிருந்தார். உற்சாகத்துக்குக் குறைவில்லை. பையில் மஸ்லின் சட்டைக்குள் ஐந்நூறு புதுத்தாள்கள் தெரிந்தன. ரோசுக்கலரில்... ரெண்டாயிரம்... இல்லை.

“புதுசா நம்ம ரூம்புக்கு ஏ.சி. வந்திருக்குடி. அனுபவிக்கண்டாமா?” என்றபடி திறந்துகிடந்த ஒன்றிய வாயிலைத் தாண்டிப்போய்க் காரை நிறுத்தினார். ஜிலோன்னு கிடந்தது வளாகம். சில் வண்டுகள் இரைச்சல் காதைக் குடைவதாய் இருந்தது. “யாராவது இருக்கப் போறாக” என்றபடியே இறங்கினாள் அவள். “அதெல்லா எனக்குத் தெரியாதா?” என்று அவளைத் தொட கையை நீட்டியவர் தள்ளாடினார்.

‘ப’ வடிவ பின் அறைகளில் முதலாவது தலைவர் அறை. அவர் தள்ளாடியபடியே முன்னால் போக பின்னால் அவள் போனாள். கும்மிருட்டாய்க் கிடந்தது. வெளிச்சம் தான் சங்கடம். இருட்டு தேவலை. குனிந்து தன்னிடமுள்ள சாவிகளால் மாற்றி மாற்றிப் போட்டு பூட்டை நோண்டினார். “அடங் நொம்மாள, அவசரத்ல அண்டால கை போவாதும்பாங்க. சரியாத்தான் இருக்கு” என்று திரும்பி அவளிடம் சாவியைத் தந்தார். அவள் பூட்டைத் திறக்க எனக் குனிந்தபோது பெரும் கிளர்ச்சியாய் இருந்தது.

உர்ர் என்ற சிறு சப்தத்துடன் குளிர்சாதனம் ஓட ஆரம்பித்தது. சேர். டேபிள். சன்னல் திரைச்சீலை. அவர் அமரும் நாற்காலிக்குப் பின்பக்கம் கட்சித் தலைவர் படமும், மகாத்மா காந்தி படமும். ஓரமாய் மேலும் நபர்கள் அமர சோபா. அங்கே புருசோத்தமன் கட்சித தலைவருக்குப் பொன்னாடை போர்த்துவதாக ஒரு படம். அவளை சோபாவுக்குத் தள்ளிப்போனார். ஏக்கமாய் “எத்தனை நாளாச்சில்ல?” என்றார். “நீங்க தான் கண்டுக்கறதே இல்ல?” என சிணுங்கினாள். அவளை மல்லாத்தி மலர்த்தினார். மேலே பார்த்தபடி கிடந்தாள் அவள். குளிர் சாதனம் ரகசியம் போல உருமிக் கொண்டிருந்தது. வெட்டிப்போட்ட வேப்ப மரத் துண்டுகளாய்க் கால்கள். பார்த்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அந்தக் குளிர் சாதனத் திண்டின் மேலே யிருந்து ஒரு நீண்ட குச்சி - எட்டிப் பார்க்கிறாப் போல என்ன அது? லேசாய் கவட்டை போன்ற நாக்கு கூட... இருட்டில் அத்தனைக்குத் தெரியுமா? பிரமையோ?

"பப்.. பாம்பு" என அலறி அவரைத் தள்ளினாள் அன்னக்கிளி.

சிவரஞ்சினியிடம் 'யாராண்டையும் சொல்லாதே' என்று சொன்ன விசயம். அவளும் ஒவ்வொருவரிடமும், 'யாராண்டயும் சொல்லாதே' என்று சொல்லியே சேதி பரவி விட்டது. அவ எந்தப் பாம்பப் பாத்தாளோ, என ஊரில் கிண்டல் தாள முடியவில்லை.

இனியும் தாமதிக்க முடியாது, என்று பட்டது புருசோத்தமனுக்கு. புல்லுக்குப் பூச்சி வந்து பூச்சிக்குத் தவளை வந்து இப்போது தவளைக்குப் பாம்பு அடைய ஆரம்பித்து விட்டது- உடனே மறுநாளே பாம்பு பிடிக்கிற ஆட்களை வரச் சொல்லி ஏற்பாடுகள் விறுவிறுத்தன. புதரில் இருந்து பாம்பு பிடித்தார்களோ, அல்லது கொண்டுவந்து பாம்புகளை விட்டு விட்டு பிடித்ததாகக் கணக்கு காட்டினார்களோ தெரியவில்லை. நாலு பாம்புகள் பிடிபட்டன. மூணு சாரை. ஒண்ணு நல்ல பாம்பு. ஒரு ஞாயிறு பூராவும் வேலை. பாம்புக்கு இவ்வளவு என்று ரேட். ரோஸ் தாள்கள் கை மாறின. புல்லைச் செத்திப் போட சுத்தப்படுத்த என நாலு பேர்.

"முதல்லியே செஞ்சிருந்தால் சின்னச் செலவு. இப்ப அதையே வெட்டித்தனமா நாலு மடங்கு துட்டு செலவழிச்சிச் செய்யறாரு இவரு" என்று அதையும் எள்ளி நகையாடினார் சத்தியமூர்த்தி. ஆனால் பெரிய செலவு என்பது தான் புருசோத்தமனுக்கு வசதி. அவர் காட்டுவதுதான் கணக்கு. புல் முளைக்காத இடங்களையும் சுத்தப் படுத்தியதாக கணக்கு எழுதலாம் அவர். எட்டு பாம்புகள் பிடிபட்டிருந்தன அவர் கணக்கில். அத்தோடு, புல் இருந்த பகுதிகளில் சிமெண்ட் தரையும் போடப்பட்டது.

அன்னக்கிளி சிவரஞ்சனியிடம் வந்து "இஞ்சி யிருக்கா இஞ்சி?" என்று கேட்டாள். அவள் கைவிரலில் புது மோதிரம். •

# பிரிவு

ஓடிக்கொண்டிருக்கும் ஆற்று
நீரைப் பார்க்கையில்
ஒன்றோடொன்று கை
கோர்த்த நீர்த் துளிகளின்
கூட்டம் ஒன்று,
ஏதோ ஒரு இலக்கு நோக்கி
ஒற்றுமையாக ஓடிக்கொண்டிருப்பது
போலவே இருக்கிறது..

ஓடும் நீரைக் கையில்
அள்ளியபோது தப்பியோடியது போக
கொஞ்சம் சிக்கியது
குழிழ்ந்த உள்ளங்கையில்..

மீண்டும் ஆற்றுக்குள் விட்ட
அந்த உள்ளங்கை நீர்,
தன்னோடு இணைந்து பயணித்துப்
பிரிந்து போன நீரைத் தேடுமா..?
மீண்டும் என்றாவது எங்காவது
இனங்கண்டு இணையுமா..?
என்று தெரியவில்லை...

தப்பியோடி மறைந்த
உடன் வந்த நீர்கூட
தவற விட்ட இவைகளுக்காய்
வழியில் ஏதோ ஒரு
ஓரத்துப் பள்ளத்துள்
ஒதுங்கிப் பதுங்கி
கவலையோடு காத்திருக்குமா
என்றும் தெரியவில்லை...!?

ஒரு இலக்கு நோக்கி
ஒற்றுமையாக
ஓடிக்கொண்டிருந்த அவற்றைக்
'கையில் அள்ளிப்
பிரித்திருக்கக் கூடாதோ'
என்று தோன்றுகிறது இப்பொழுது...!

– ஆதியோகி

# தவித்த கவிதை

அது ஏனோ அந்த சந்திப்பு
கடைசிவரை நிகழவேயில்லை...
அது ஏனோ எனக்கு வசப்படவேயில்லை..
ஏனோ நானும் அதைத்
தேடி கண்டடையும் முனைப்பின்றியிருக்கிறேன்...
வருடக்கணக்கில் எழுதித்தீர்க்கும்
கவிதையில் எப்படியோ தப்பியிருக்கலாம்
அந்த தீராக்கவிதை ..
அறை முழுவதும்
இடைவெளியின்றி
இட்டு நிரப்பிய கவிதைகளில்
விடுபட்ட வார்த்தைகளாய்..
நேசங்கொண்டு
நெஞ்சாங்கூடு நிறைக்கும் பவளமல்லி வாசமாய்..
நதி தீரத்து அடியாழ சுழாங்கல்லின் மௌனமாய்..
ஆடிக்களித்த மயிலின்
ஆனந்த அகவலாய்..
புதர்பதுங்கிய
வெள்ளை முயலின்
கள்ளமில்லா கண்களாய்..
புலிப் பாய்ச்சலில்
உயிர்தப்பிய வரையாட்டின் கொம்பாய்..
மூங்கில் காட்டில் ஒளிந்து கிடக்கும் காற்றின் நாதமாய்..
வான்தொட்டு கால்பதிக்க ஆசையோடு பறந்தலையும்
தேன்சிட்டின் கால்சுவடாய்..
மழை கரைத்த மகரந்தத்துளியின்
மகத்துவமாய்..
மலைமுகட்டின் ஊசியிலை பெருமரத்தின்
நுனியிலை தாங்கும் பனித்துளியாய்..
மண் கூட்டை உடைத்து வெளியேறா
வெகுளி குளவியாய்..
தவித்த கவிதையை நான்
கண்டும் காணாமல்
கடப்பதாய் மௌனத்தின் பெருங்குரலெடுத்து
கத்தி தீர்த்திருக்கலாம் அக்கவிதை ..
நான் கேட்டிராமலிருக்கலாம்..
கவலையற்ற அந்த அதிகாலை
கனவினின்று தட்டியெழுப்பிய
அக்கவிதையின் பிஞ்சு விரல்களை பற்றுகிறேன் ..

– இன்போ. அம்பிகா

# யாழினிகள் தெரிவதில்லை

உயிர் பிழைத்த மகிழ்ச்சியை
நிர்மூலமாக்கிக்கொண்டிருக்கிறது
யுத்த வாதை
அகதி முகாமின் இரவுகளை
கலைத்துக்கொண்டே நிசப்திக்கிறது
யாரோ ஒருவரின் கதறல்
புன்னகைக்கும் ஒவ்வோர் முகங்களிலும்
வலியின் ரேகை பாதாளம் பாய்கிறது
பேரலைகளோடு உடையும்
தருணத்தில்
துர்க்கனவு ஆழியாய் எழுகிறது
சமுத்திரத்தின் பெருவெளியில் படகுகளோடு
மூழ்கிய குழந்தைகளையொதுக்கும்
கரையில்
நாம் அகதியாய் அடுக்கப்பட்டிருக்கிறோம்
யாதும் ஊருமில்லை
யாவரும் உறவுமில்லை.

★★★

பெருங்கதைகளை
பேசித் தீர்க்க விரும்பாதவளாய்
பேச்சினைத் திசை திருப்பும்
யாழினியோர் அவலம்
வதைமுகாமில்
வன்புணர்வாக்கப்பட்ட தாயும்
நிர்வாணமாக்கிச் சுடப்பட்ட தந்தையும்
சவக் குவியலுக்குள்
அடையாளமற்றுப் போன
நாளின் நினைவுகள் எழாதபடிக்கு
மெல்ல மெல்ல
கரைந்து கொண்டிருக்கிறாள் யாழினி
உங்களுக்கு யாழ்ப்பாணம் தெரிவதைப் போல
யாழினிகள் தெரிவதில்லை.

– சுகன்யா ஞானசூரி

→ கட்டுரை

# மகாகவி பாரதியாரின் திருநெல்வேலி பள்ளிநாட்கள்

• ச.மகாதேவன்

மகாகவி பாரதி அக்கினிக்குஞ்சாய் வீறுகொண்டு எழுந்தவன். வறுமை விரட்டியபோதும் உறவுகள் எதிர்த்தபோதும் சுதந்திரபாரதம் பெறத் தன் வாழ்வையே அர்ப்பணித்தவன். தாமிரபரணி பாயும் சீவலப்பேரி, மகாகவி பாரதியின் தந்தை சின்னச்சாமிஐயர் பிறந்த ஊர். தந்தை கடுவாய்ச் சுப்பைய்யர் காலமான பின் தாய் பாகீரதியம்மையாருடன் பாரதியின் தந்தை எட்டயபுரம் செல்ல நேரிடுகிறது.

எட்டயபுரத்தில் சின்னசாமிஐயர் பள்ளிப்படிப்பை முடித்து எட்டயபுர ஜமீனில் பணிபுரிகிறார்.அதே ஊரில் வசித்த லட்சுமிஅம்மையாரை மணக்கிறார். 1882 டிசம்பர் 11 இல் மகாகவி பாரதி பிறக்கிறார். சுப்ரமணியன் என்று பெயரிடுகிறார்கள். பாரதி பிறந்து ஐந்தாமாண்டில் 1887இல் பாரதியின் தாய் லட்சுமிஅம்மையார் காலமாகிறார். பாரதி தன் சுயசரிதையில் தன்தாயின் இறப்பை ஏக்கத்தோடு பதிவு செய்துள்ளார்.

“என்னை ஈன்று எனக்கு ஐந்து பிராயத்தில்
ஏங்கவிட்டு விண் எய்திய தாய்”

**(சுயசரிதை: 20)**

1889ஆம் ஆண்டில் பாரதியின் தந்தை சின்னசாமிஐயர் வள்ளியம்மாள் எனும் மங்கையை மறுமணம் செய்கிறார்.பாட்டி பாகீரதியின் அன்பும் தாய்வழிப்பாட்டனார் ராமசாமிஐயரின் அன்பும் பாரதியைச் செழுமைப்படுத்தின.பாரதிக்கு மற்ற குழந்தைகளுடன் விளையாடுவதற்கு ஆசைஇருந்தாலும் படிப்பில் மட்டுமே கவனம் செலுத்தவேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லி வளர்த்ததைப் வருத்ததோடு பதிவு செய்துள்ளார்.

ஆண்டோர் பத்தினில் ஆடியும் ஓடியும்
ஆறு குட்டையின் நீச்சினும் பேச்சினும்
ஈண்டு பன்மரத்து ஏறிஇ றங்கியும்
என்னொடுஒத்த சிறியர் இருப்பரால்;
வேண்டு தந்தை விதிப்பினுக்கு அஞ்சியான்
வீதி ஆட்டங்கள் ஏதினும் கூடிலேன்,
தூண்டு நூற் கணத்தோடு தனியனாய்த்
தோழமை பிறிதின்றி வருந்தினேன்

**(சுயசரிதை: 4)**



தோழமை ஏதுமின்றி வருந்தியே அவர்தம் குழந்தை நாட்களைக் கழித்துள்ளார்.

பாரதியின் தந்தை எட்டயபுரத்தில் தொடங்கிய காட்டன் ஜின் பாக்டரி செயல்படமுடியாத நிலையில் வறுமை ஆட்டிப்படைத்தது. கையில் வைத்திருந்த பணத்தை ஆங்கிலஅரசின் சதியால் தன் தந்தை இழந்ததைப் பாரதி துயரத்துடன் பதிவு செய்கிறார்.

“ஓங்கி நின்ற பெருஞ்செல்வம் யாவையும்
ஊணர் செய்த சதியிலிழந்தனன்”

ஏழுவயதில் கவிபுனையகூடிய ஆற்றல் பெற்றிருந்த சுப்பையாவுக்கு எட்டயபுர அரண்மனையில் 1893 ஆம் ஆண்டு சிவயோகியார் தலைமையில் புலவர் குழு ‘‘பாரதி’’ என்ற பட்டத்தை வழங்கியது.

அன்று முதல் சுப்பையா சுப்பிரமணிய பாரதியானார். இத்தனைத் திறன்களைத் தன்னகத்தே பெற்ற அருமைமகன் சுப்பிரமணிய பாரதியை இன்னும் உயர்த்திப் பார்க்க சின்னச்சாமி அய்யர் ஆசைப்பட்டார். திருநெல்வேலி ஆங்கிலவெர்னாகுலர் பள்ளி அவர் நினைவுக்கு வந்தது.

திருநெல்வேலி டவுண் தெற்குப்புதுத்தெருவில் 1859 ஆம் ஆண்டு ஆங்கிலமும் தமிழும் ஒன்றாகக் கற்க சைவப்பெருமக்களால் தொடங்கப்பட்ட ஆங்கிலவெர்னாகுலர் பள்ளி, பின்நாளில் 1861 ஆம் ஆண்டு தற்போதுள்ள திருநெல்வேலி சந்திப்புக்கு அருகிலுள்ள இடத்திற்கு மாற்றப்பட்டு இந்துக் கலா சாலை என்று பெயர் மாற்றம் பெற்றது.

எட்டயபுரத்தில் மகன் சுப்பையா இருந்தால் வறுமை மிகவும் பாதித்துவிடும் என்பதால் பாரதியைத் திருநெல்வேலியில் உள்ள ஆங்கிலவெர்னாகுலர் பள்ளி என்ற பெயரில் அன்றும், மதுரை திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரி மேல்நிலைப் பள்ளி என்று இன்று அழைக்கப்படும் ம.தி.தா இந்துக் கல்லூரிப் மேல்நிலைப்பள்ளியில் சின்னசாமி கொண்டு சேர்க்கிறார்.

இயற்கை விரும்பியாகிக் கவிதைகள் படைக்கும் மகாகவி பாரதியால் பள்ளிப்படிப்பை மனமொன்றிக் கற்கமுடியவில்லை. சுதேசமித்திரன் இதழில் எழுதிய “மூன்றுகாதல்” எனும் கவிதையின் தொடக்கத்தில் பள்ளிப்படிப்பு நாட்டமில்லாமல் போனதாக பாரதி குறிக்கிறார். ‘‘பள்ளிப் படிப்பினிலே-மதிபற்றிட வில்லை’’ என்ற வரி கவனத்திற்குரியது.

“பிள்ளைப் பிராயத்திலே-அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட்டேனங்கு
பள்ளிப் படிப்பினிலே-மதி
பற்றிட வில்லை யெனிலுந் தனிப்பட
வெள்ளை மலரணமேல்-அவள்
வீணையுங் கையும் விரித்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்-கண்டேன்
வெள்ளை மனது பறிகொடுத்த தேனம்மா!”

என்று பாரதி எழுதியுள்ள பாடல்வழி, பாரதியின் இயற்கை நாட்டத்தைப் புரிந்துகொள்ள முடிகிறது.

தமிழின் மீதும் தமிழ் இலக்கியங்கள் மீதும் தீராப்பற்று கொண்ட பாரதியால் ஆங்கிலக்கல்வியை ஏற்க முடியவில்லை. எட்டயபுரத்தில் இருந்து கல்விபயில நெல்லை வந்ததால் செலவு அதிகம் ஆனது. தந்தையின் வறுமை அவரை அரித்தது. மனம் நிம்மதி இழந்து தவித்தது



செலவு தந்தைக்கு
ஓர்ஆயிரம் சென்றது;
தீது எனக்குப் பல்ஆயிரம்
சேர்ந்தன;
நலம்ஓர்
எள்துணையும்கண்டிலேன்
அதை
நாற்பதாயிரம் கோயிலில் சொல்லுவேன்!

**– சுயசரிதை**

சனவரி 24,1897 ஆம் ஆண்டு தந்தையாரால் பள்ளிப்படிப்புக்குப் பணம் அனுப்ப முடியா நிலையில் பதினைந்து வயதேயான பள்ளிச் சிறுவன் பாரதி எட்டயபுர மன்னர் வெங்கடேஸ்வரருக்கு மிகத் துணிச்சலாக விண்ணப்பச் சீட்டுக்கவிதையை நேரடியாக அனுப்பி வைத்தான்.

”கைப்பொருளற்றான் கற்பதெவ்வகை?
பொருளானன்றிக் கல்வியும் வரவில
கல்வியானன்றிப் பொருளும் வரவில
முதற்கட் கல்வியே பயிறல் முறைமையா
மதற்குப் பொருளிலையாதலினடியேன்
வருந்தியே நின்பால்வந்தடைந்தனன்”

கல்வி பயில்வதற்குப் பெரும்பொருள் இருத்தல் அவசியம் என்பதை வலியுறுத்தி ‘‘ஊழியன் இளசை சுப்பிரமணியன்’’ என்ற பெயரில் பாரதி வரைந்த சீட்டுக்கவி அன்றைய நிலையின் படப்பிடிப்பு. அப்போது பாரதியார் ஐந்தாம்படிவம் அதாவது பத்தாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தார்.

திருநெல்வேலியில் பாரதியார் பள்ளிப்படிப்பை மேற்கொண்டபோது ஆசிரியர்களிடம் தமிழிலக்கியங்கள் குறித்த விவாதங்களை மேற்கொண்டார்.புதுமையான சிந்தனைகளை முன்வைத்தார்.

1897 ஜூன் 27 பதினைந்துவயது... பாரதிக்கும் கடையத்தில் வசித்த செல்லப்பா ஐயரின் மூன்றாம்பெண்குழந்தை செல்லம்மாவுக்கும் திருமணம் நடந்தது. திருமணம் முடித்தவுடன் பாரதி பள்ளிக்குச் செல்லத்தொடங்கிவிட்டார்.

1898 ஜூலை 20ஆம் நாள் பாரதியின் வாழ்வில் புயல்அடித்த நாள். பாரதியின்

தந்தை சின்னசாமிஐயர் மரணமடைகிறார். பள்ளிப்படிப்பு தடைப்பட்டுவிடக் கூடாது என்பதைக் கருத்தில்கொண்டு பாரதியின் பாட்டி பாகீரதிஅம்மையார் குடும்பச் சொத்தாக இருந்த எட்டயபுரம் வீட்டை 1898ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28ஆம் நாள் இருநூறு ரூபாய்க்கு அடமானம் வைத்த அரிய செய்தியை வரலாற்றாசிரியர் செ.திவான் ''பாரதி செல்லம்மாள் உயில்'' என்ற நூலில் பதிவு செய்கிறார். பாரதியின் பள்ளிப்படிப்பு தடைப்பட்டுவிடக்கூடாது என்பதற்காக வயதான காலத்திலும் வீட்டை அடமானம் வைத்தாவது படிக்க வைக்கவேண்டும் என்று போராடிய பாரதியின் பாட்டி பாகீரதிஅம்மையாரின் மனஉறுதியை என்ன சொல்வது?

திருநெல்வேலியில் பள்ளிப்படிப்பை நிறைவுசெய்த பாரதியை 1898 ஆம் ஆண்டு காசிக்கு அழைத்ததும், தங்குவதற்குத் தன் வீட்டில் இடம்தந்து காசி ஜெய்நாராயண கலாசாலையில் பாரதி பள்ளிப்படிப்பைத் தொடர்வதற்கும் காரணம் பாரதியின் அத்தை குப்பம்மாள்தான்.திருநெல்வேலி இந்துக் கலாசாலையில் பள்ளிப்படிப்பு முடித்ததைப்போல் காசியிலும் மத்திய இந்துக்கல்லூரியில் பாரதி முதல்வகுப்பில் தேறினார்.

மகாகவி பாரதியின் பள்ளிவாழ்வில் நிறைய சவால்களை அவர் எதிர்கொண்டார். சிறுவயதில் தாயை இழந்து திருநெல்வேலியில் பள்ளிப்படிப்புக்குக் கூடத் தந்தையால் பணஉதவி செய்யமுடியா நிலையில் எட்டயபுரம் வெங்கடேஸ்வரருக்கு மிகத் துணிச்சலாக விண்ணப்பச் சீட்டுக்கவிதையை நேரடியாக சிறுவயதில் அனுப்பி வைத்த மனஉறுதி வியக்க வைக்கிறது.

பள்ளிப்படிப்பு நடக்கும்போதே ஏழுவயது செல்லம்மாவை மணம் செய்ய வைத்த குடும்பச்சூழலையும் திருநெல்வேலியில் இருந்தபோதுதான் எதிர்கொண்டான்.

''மனதில்உறுதி வேண்டும்'' என்ற வரிகள் அவன் பட்டஅடிகளில் இருந்து பிறந்ததைக் காணமுடிகிறது. ரசிக்கும்மனம் இருந்ததால் துன்பத்திலும் பாரதியால் உருக்குலையாமல் இருக்க முடிந்தது.

ஆங்கிலேயரின் கொடுமையால் வணிகம் இழந்து நட்டப்பட்டு நின்ற சின்னசாமி ஐயர் துயரக்கடலில் வீழ்ந்தார். இதனால் உள்ளம் குன்றித் தளர்ந்த அவர் 1898ஆம் ஆண்டு ஜூன் மாதம் மரணமடைந்தார். ஐந்து வயதில் தாய் இறந்துபோனாள்,

**'மனதில் உறுதி வேண்டும்' என்ற வரிகள் அவன் பட்டஅடிகளில் இருந்து பிறந்ததைக் காணமுடிகிறது. ரசிக்கும் மனம் இருந்ததால் துன்பத்திலும் பாரதியால் உருக்குலையாமல் இருக்க முடிந்தது.**

பதினைந்து வயதில் தந்தையையும் இழந்து தனிமரமாய் நின்றார் பாரதியார். அவர் தம் அவல நிலை குறித்துச் சுயசரிதையில் :

*தந்தைபோயினன், பாழ்மிடி சூழ்ந்தது;*
*தரணி மீதினில் அஞ்சல் என்பார்இலர்;*
*சிந்தையில்தெளிவு இல்லை; உடலினில்*
*திறனும்இல்லை; உரன்உளத்து இல்லையால்*
*எந்தமார்க்கமும் தோற்றிலது என் செய்கேன்?*
*ஏன் பிறந்தனன் இத்துயர் நாட்டிலே?*

**(சுயசரிதை: 46)**

பள்ளியில் படித்துக்கொண்டிருந்தபோதே தந்தையின் இறப்பு அவரை நிலைகுலைய வைத்தது.எட்டயபுரம் வீட்டை அடகுவைத்தாவது பள்ளிப்படிப்பை நிறைவு செய்ய வேண்டும் என்ற பாட்டி பாகீரதிஅம்மையாரின் நெஞ்சுரம் நமக்கு நம்பிக்கை எனும் செய்தியைத் தருகிறது.

*"கற்கை நன்றே கற்கை நன்றே*
*பிச்சை புகினும் கற்கை நன்றே"*

என்ற அவ்வையாரின் வரிகள் நம் நினைவுக்கு வருகின்றன.என்ன நடந்தாலும் பாரதியார் திருநெல்வேலி மண்ணில் தன் கல்வியை நிறுத்தவில்லை . காசி எனும் வேறுபகுதிக்குச் சென்றபோதும் அவன் வாய்ப்புகளைத் தனதாக்கிக்கொண்டான். அதனால்தான் திருநெல்வேலி மதிதா பள்ளியில் பாரதி பயின்ற வகுப்பறையில் வரலாறு இன்னும் வசித்துக்கொண்டிருக்கிறது.பாரதியார் பயின்ற வகுப்பறையை நிகழ்கால மாணவர்கள் காணும் வகையில் ம.தி.தா இந்துக் கல்லூரிப் மேல்நிலைப்பள்ளி கல்விச்சங்கம் பள்ளி நிகழ்வுகளுடன் ஓவியர் வள்ளிநாயகத்தைக் கொண்டு மனம் கவரும் ஓவியக் காட்சிகளாய் மாற்றித்தந்து மகாகவிக்கு அஞ்சலி செய்து கொண்டிருக்கிறது. •





• வ.தெ.சு.கவுதமன்

# சாவுக் கூத்து!



"எங்கண்ணனை கூட்டிட்டுப் போயி ஊத்திக் குடுத்து, ஊத்திக் குடுத்தே கொன்னுட்டியேடா, பாவி!"

விறுவிறுவென அங்கிருந்த வெளக்கமாத்தை எடுத்து வீசினாள் சிவகாமி. சாவுக்கு வந்திருந்த கூட்டத்தில் யார் மீதும் படாமல் சரியாக வீரய்யனின் உச்சந்தலையிலேயே விழ, உச்சத்துக்கு ஏறியிருந்த போதையும் சேர, தடுமாறி விழுந்தான்.

"அடுத்த பாடை ஒனக்குத்தான்டா... என்னோட சாபம் பலிக்கும்டா!" காலால் எட்டி மிதிக்கப் போனவளை கற்பகம் இழுத்துப் பிடித்தாள்.

விழுந்தவன் சுதாரித்து கரட்டாண்டி போல் தலைதூக்கி, "நீ தாழ்னி தே... முழ்ட" என்று குளற, மேற்கொண்டு சிவகாமி ஏதும் பேசாதபடி, அவளது கையைப் பிடித்து வீட்டினுள் இழுத்துச் சென்றாள் கற்பகம்.

"வாங்க மயினி, அந்தாளுகிட்ட என்னாத்துக்கு சண்ட? அந்தாள அடிச்சாப்ல ஓங்கண்ணன் வந்திடவா போறாரு?"

கற்பகத்தின் இழுப்புக்கு வீட்டினுள் வந்தவள், அவளின் தோளில் முகம் புதைத்து தேம்பினாள், "சம்முவண்ணனுக்கு எம்மேல எம்புட்டு பாசம் தெரியுமா? செவாமீன்னு அவரு வாய் நெறையா இனி எப்ப கூப்புடுவாரு?



என்னோட கல்யாணத்துக்கு நக சேக்குறதுக்காக அம்புட்டு தூரம் கஷ்டப்பட்டுச்சு... அப்பல்லாம் பாழாப்போன குடிப்பழக்கம் கெடையாது. இந்த வீரய்யன் தே... பய சேக்காளியானதுந்தான் அம்புட்டும்... எங்கண்ணி மொகத்த பாத்தியா கற்பகம்? அவரு பொணத்துக்கிட்ட எப்பிடி இடிஞ்சி போயி உக்காந்திருக்காக பாத்தியா? எம்புருஷன் தான் பாழாப்போன குடியால போயி சேந்தான்னா இப்ப எங்கண்ணனும் இதே குடியால போயிட்டானே... அந்த வீரய்யன் பயலப் பாத்ததும் மனசு தாங்கல கற்பகம்... அதான் வெளக்கமாத்தாலயே போட்டேன்" இன்னும் குலுங்கிக் குலுங்கி அழுதாள். "அழாத மயினி, நாங்கள்லாம் இருக்கோம்ல" சிவகாமியின் முதுகு வருடி தேற்றினாள். அவள் அழுவதைப் பார்த்து, அவளது பிள்ளைகள் அவளின் சேலையைப் பிடித்தபடி அழுதனர்.

கற்பகம், சிவகாமியின் காதில், "மயினி, பசங்க அழுதுங்க பாருங்க, கண்ணத் தொடைங்க" என்றதும், "இதுங்க மேலயும் அண்ணனுக்கு அம்புட்டு உசுரு, போன தீவாளிக்கு நெறையா பட்டாசு வாங்கியாந்து குடுத்துச்சு... தாம் பிள்ளைகளக்கூட அம்புட்டு பாக்காது". சிவகாமியின் அழுகை பார்த்து அங்கு வந்த அவளது வயதான அம்மா, "எங்க குடும்பத்த புடிச்ச சாபம், ஒவ்வொரு ஆம்பளையா காவு வாங்குது" என்று மேலும் அழுகையைக் கூட்ட, "ஆயா, நீயே அழுதா எப்படி? வெளில வா, உம்பையன் பொணத்தாண்ட ஒக்காரு. வெசாரிக்க வர்றவுக ஒன்னத்தான் தேடுவாக" இழுத்துச் சென்று அமர்த்தினாள் கற்பகம்.

சண்முகத்தின் பிணத்திற்கு மாலை போட்டுவிட்டு "எப்டியாச்சு?" என ஃபார்மாலிட்டி கேள்வியை கேட்பவர்களிடம், "நேத்திக்குக் கூட நல்லாத்தான் இருந்தாரு", "நேத்து

நைட்டு சாப்பிடுறப்ப கூட நல்லாத்தான் இருந்தாரு", "நேத்திக்கு கூட எங்கட்டல்லாம் நல்லா பேசிட்டு இருந்தாரு" என்று ஒரே டெம்ப்ளேட்டாக இல்லாமல் விதவிதமான பதில்களை நல்லவிதமாகத் தந்தாள் கற்பகம்.

சண்முகத்தின் அம்மாவிடம் அந்த தெளிவு இல்லை. "ஒரு நாளாவது நெதானத்தோட வூட்டுக்கு வந்தியாடா? அந்த சனியன குடிக்காதடான்னா கேட்டியாடா? அதெல்லாம் ஒண்ணியும் ஆகாது, ஆகாதுன்னுட்டு இப்டி உங்கப்பனாட்டம் அல்பாயிசுல போயிட்டியேடா. இந்த கெழவி எப்டி உன் குடும்பத்த காப்பாத்துவேன்?" கண்ணாடிப் பெட்டியை பிடித்தபடி அழுதாள் சண்முகத்தின் அம்மா.

ஃப்ரீசர் பெட்டிக்கு பக்கத்திலேயே வெறித்தபடியிருக்கும் சண்முகத்தின் மனைவி சுமதிக்கு எதாவது டீத்தண்ணியாவது குடிக்கக் கொடுக்கலாமென கற்பகம் நினைக்கையில், "எந்த முண்டச் சிறுக்கிடி எம்புருஷன வெளக்கமாத்தால அடிச்சது?" எனக் கோபத்தோடு கேட்டபடி சற்றுமுன் அடிவாங்கிச் சாய்ந்த வீரய்யனின் மனைவி தெரு முக்கில் நின்று கத்திக் கொண்டிருந்தாள். கூட்டத்திலிருந்த யாரோ போட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.

கேட்ட மாத்திரத்தில் விறுவிறுவென தெரு முக்குக்கு விரைந்தாள் கற்பகம். "ஏன் இங்க நின்னு கத்துற? வா, வந்து வூட்டுக்குள்ள வந்து தகராறு பண்ணு... அப்டியே சம்முவம் மாமாவையும் ரெண்டு கேள்வி கேளு" கற்பகம் படபடக்கவும், வீரய்யன் மனைவி இன்னும் சூடானாள். "ஒனக்கெதுக்குடி கோவம் வருது? அடிச்ச சிறுக்கிய வரச் சொல்லுடி, எம்புருஷன் கூட்டிட்டு போயி ஊத்திக் குடுத்தானா, இல்ல அவ அண்ணன் எம்புருஷனுக்கு ஊத்திக் குடுத்தானான்னு அவள நான் கேக்குறேன். இந்தாளுக்கு முன்ன அவன் போயி சேந்ததும் அவன் நல்லவனாயிட்டானா?"

சற்று யோசித்தவள், சட்டெனத் திரும்பி, அங்கே இன்னும் குளறியபடியிருந்த வீரய்யனை பிடித்து இழுத்து வந்தாள் கற்பகம். "யாரு கூட்டிட்டு போனாங்கன்னு பஞ்சாயத்து பண்ற நேரமா இது? ரெண்டு பேருந்தான் டெய்லி குடிச்சிட்டு திரிஞ்சாங்க. ஒருத்தரு இன்னைக்கு போயிட்டாரு. வூட்டுலருந்த ஒரே ஆம்பளையும்

> **“எனக்கென்னக்கா கஷ்டம்? கல்யாணமாகி ஒரே வருசத்துல போயி சேந்துட்டாரு. எனக்கென்ன கொழந்தையா குட்டியா? ஆனா நீங்க தா ரொம்ப வருஷமா கஷ்டப்பட்டிருக்கீங்க””**

போயிட்டானேன்னு துக்கத்துல இருக்கவுககிட்ட பிரச்சன பண்ணாம உம்புருஷன கூட்டிட்டு போகப் பாரு."

"பிரச்சனை நானா பண்றேன்? நீ வெலகு, வெளக்கமாத்தால அடிச்சவள வரச்சொல்லு"

சாவுக்கு வந்திருந்த ஏரியா எக்ஸ் கவுன்சிலர், "ஏம்மா, மொதல்ல இவனக் கூட்டிட்டு கெளம்பு. சாவு வீட்டுல தகராறு பண்ணிக்கிட்டு... எங்கிட்ட வாங்குன எட்டாயிரம் ரூவாய தராம ஒம்புருஷன் நாலு வருஷமா என்னைய அலைய விடுறான்... பெருசா இவனுக்கு சப்போர்ட் பண்ணிட்டு வந்துட்ட...". அவர் சொன்னதும் ஆளாளுக்கு வீரய்யனை குற்றம் சுமத்தினர்.

இதைச் சற்றும் எதிர்பார்க்காதவள், "அந்த சிறுக்கி தெருவுல வராமலா போவா, வரட்டும், அவளையும் இதே மாதிரி வெளக்கமாத்தாலயே அடிச்சாத்தான் ஏ ஆத்திரம் அடங்கும்" கத்தியபடியே புருஷனை சட்டையை பிடித்து இழுத்துக்கொண்டு நகர, கற்பகத்துக்கு அவளது அலுவலக சூப்பர்வைசரிடமிருந்து கால் வருகிறது. அப்போது தான் அலுவலகத்தின் சாவி தன்னிடமிருப்பதை உணர்கிறாள். உடனே, சாவிக்கொத்தை எடுத்துக்கொண்டு, விடுவிடுவென அலுவலகம் நோக்கி விரைந்தாள்.

அலுவலக ஷட்டர் பூட்டப்பட்டிருக்க, அருகே சூப்பர்வைஸர் கடுப்புடன் நின்று கொண்டிருந்தார்.

"ஏன் லேட்டு? நீ சீக்கிரம் வந்து தெறப்பன்னு தான ஒன்ன சாவிய எடுத்துட்டு போகச் சொல்றேன்?"

"சொந்தக்காரர் ஒருத்தரு இன்னைக்கு காத்தால திடீர்னு எறந்துட்டாரு. அதா வர லேட்டாயிடுச்சு"

"என்ன எழவா இருந்தாலும் ஒரு எட்டு சாவியக் குடுத்து போயித் தொலைய வேண்டியது தான?"

சூப்பர்வைசர் இன்னமும் நேற்றைய கடுப்பிலேயே இருப்பதை கற்பகம் உணர்ந்து கொண்டாள். நேத்திக்கு இவன் அப்டி கேட்டதுமே, ஒண்ணு சப்புன்னு அறைஞ்சிருக்கணும், இல்லன்னா அந்நேரமே வேலைய விட்டு நின்னிருக்கணும்.

மேலும் அவன் முகத்தைப் பார்க்காமல், பூட்டைத் திறந்து ஷட்டரை உயர்த்தி விட்டாள். ஷட்டரைத் தூக்க எப்பவும் கை கொடுப்பவன், இன்று ஒதுங்கி வேடிக்கை பார்த்தான்.

“இன்னும் சாவெடுக்கல. எனக்கு இன்னிக்கு ஒரு நா லீவு வேணும். ஆபீஸ தொறந்து வைக்கத்தா வந்தேன்.”

“சரிசரி, கெளம்பு. ஒனக்கு புடிச்சிருந்தா வேலைக்கு வா”

இரண்டு அர்த்தத்தோடு சொன்னவனை கண்டுகொள்ளாமல் வீடு நோக்கி விரைந்தாள்.

ஒரு வழியாக, பொழுதிருட்டுமுன் சாவை எடுத்து விட்டார்கள். ஊர்வலத்தின் முன்னே அத்தனைக்குப் பிறகும், எளந்தாரிப் பசங்களோடு சேர்ந்து வீரய்யனும் தூக்கலான போதையுடன், அவிழ்ந்த லுங்கியை தூக்கிப் பிடித்தபடி ஆட்டம் போட்டபடி சென்று கொண்டிருந்தார்.

சாவெடுத்த வீட்டினுள் இப்போது விரிச்சென்று இருந்தது. சண்முகத்தின் போட்டோ ஒன்றை கண்ணீர் அஞ்சலி போஸ்டர் அடித்த ஏரியா பசங்களே பிரேம் போட்டும் கொடுத்திருந்தார்கள். அதை வைத்து விளக்கேற்றி இருந்தார்கள். விளக்கருகே சுமதி சுவரில் சாய்ந்தபடி இருந்தாள். அவளருகே அமர்ந்த கற்பகம், கைகளைப் பற்றி, "என்னக்கா, நீ அழவேயில்ல? சாவத் தூக்குறப்பவாவது அழுவேன்னு பாத்தே" என்றவளிடம்,

"எல்லாம் அழுது முடிச்சாச்சு. இனி அந்த மனுஷனுக்காக அழ என்னிடம் எதும் இல்ல கற்பகம். நான் நாலு கடைல சுத்தம் பண்ணி சம்பாரிச்ச காசையெல்லாம் இந்த மனுஷன் இம்புட்டு நாளா திருடி அழிச்சான். சண்டை போட்டு வாங்கியும் அழிச்சான். தெனமும் கொழந்தைங்க முன்னாலயே என்னைய அத்தனை அடி அடிப்பான். அவ்ளோ அசிங்க அசிங்கமா கேப்பான். இப்ப நா நிம்மதியா ஒணர்றேங் கற்பகம். இனி என்னைய அடிக்க யாரு இருக்கா? நா சம்பாரிச்சத புடுங்க யாரு இருக்கா? இனி யாருக்காக நா குடிக்காதிங்க, குடிக்காதிங்கன்னு கெஞ்சணும்? எம்புள்ளைங்களும் கெட்டுப் போகாம நல்லா வளப்பேன் கற்பகம்."

"எக்கா, இப்பத்தான் மாமாவ எடுத்துட்டு போயிருக்காக. இப்பவே இதெல்லாம் பேசணுமா?"

"நா இப்பத்தான் பேசறேன் கற்பகம். இப்டி பேசற எனக்கு நம்பிக்கைய குடுக்குறதே நீ தாம்புள்ள"

கற்பகம் திடுக்கிட்டாள்.

"ஒன்ன விட பெருசா எனக்கென்ன கஷ்டம் வந்துறப் போகுது? நீ வாழல?"

"எனக்கென்னக்கா கஷ்டம்? கல்யாணமாகி ஒரே வருசத்துல போயி சேந்துட்டாரு. எனக்கென்ன கொழந்தையா குட்டியா? ஆனா நீங்க தா ரொம்ப வருஷமா கஷ்டப்பட்டிருக்கீங்க""

“நானாவது அடி மட்டும் தான் வாங்குனேன். உன்னைய யார் யார் கூடவோ, ஏன், எம்புருஷன் கூடல்லாம் தான் எணச்சு சந்தேகப்பட்டான் ஒம்புருஷன். அதெல்லாம் எத்தன நரக வேதன தெரியுமா?”

“அட விடுக்கா, போத ஏறிடுச்சுன்னா எவந்தா சுயமா இருக்கான்? அந்த போத தான எல்லாத்தியும் பேச வக்கிது. ஏன்க்கா, ஒனக்கு கொஞ்சங்கூட மாமா போன வருத்தம் இல்லியா?"

"எப்டியிருக்கும்? இதே வாயால எத்தன தடவ "செத்து ஒழி"ன்னு சாபம் விட்டிருப்பேன் தெரியுமா? அது எதோ பேச்சுக்காக இல்ல, மனசறிஞ்சு தான் திட்டியிருக்கேன்."

“நம்மளயறியாமக்கூட சாபமே விடக்கூடாதுக்கா." என்றவளை இடைமறித்த சுமதி,

"எங்கிட்டயாவது இப்பவாவது ஒரு உண்மையச் சொல்லு கற்பகம். ஒம்புருஷனுக்கு லாஸ்ட்டா நீயும் வெஷந்தான வச்ச?" என்றவளை, சில நிமிடங்கள் அர்த்தத்தோடு உற்றுப் பார்த்ததில் உடைப்பெடுத்த கண்ணீரோடு அணைத்துக் கொண்டாள் கற்பகம். •

# கண்டல்...

**● சுப்ரா**

வால்காட் என்றதுமே நினைவுக்கு வருபவர்கள் மூன்று பேர்கள். உலகையே கலக்கிவிட்டு பின்னர் இந்தியக் காவல்துறையிடம் மாட்டி திகார் சிறையில் இருந்த அமேரிக்க கடத்தல்காரன் டேனியல் ஹெய்லி வால்காட். திகார் சிறையில் இருந்து தப்பிய முதல் கைதி என்ற பெருமையும் உண்டு அவனுக்கு. அப்புறம் கிரிக்கெட்டில் “மூன்று W” என்று அறியப்பட்ட மூன்று மேற்கிந்திய கிரிக்கெட் வீரர்களில் ஒருவரான க்ளைட் லியோபோல்ட் வால்காட். [எவர்ட்டன் வீக்ஸ் மற்றும் ஃப்ராங் வொரல் ஆகியோர் மற்ற இருவர்கள்.] மூன்றாமவர் 1992 ல் நோபல் பரிசு பெற்ற டெரக் ஆல்டன் வால்காட் [1930 2017] என்ற கவிஞர் மற்றும் நாடக எழுத்தாளர். இவரும் மேற்கிந்திய தீவைச் சேர்ந்தவர்தான். நோபல் பரிசு பெற்ற இரண்டாவது மே. இ. எழுத்தாளர். [இன்னொருவர் 1960 ல் நோபல் பரிசு பெற்ற செயிண்ட் ஜான் பெர்ஸி] சரி, மூன்றாவது வால்காட்டின் கவிதை ஒன்றைப் பார்ப்போம். நிலா குறித்த புதுமையான உவமை.

*தொத்தி நின்றது*  
*வானில் காசு*  
*தலையும் இல்லை*  
*பூவும் இல்லை. -*

16 வது, 17 வது, 18 ம் நூற்றாண்டுகளில் பாளையப்பட்டு பட்டக்காரர்களும், ஜமீன்தார்களும் தங்களது பரம்பரையின் வரலாற்றையும், தங்கள் வசம் உள்ள சொத்துகளின் விபரங்களையும் சுவடிகளில் எழுதி ஆங்கிலேயர்களிடம் தங்கள் உரிமைகளை நிலை நாட்டும் விதமாக எழுதிய தாக்கீடுகளை கர்னல் மக்கன்ஸி என்பவர் தொகுத்து வெளியிட்டுள்ளார். அந்த கையெழுத்துப் பிரதிகள் அவற்றின் மூல வடிவத்திலேயே ” பாளையப்பட்டுக்களின் வரலாறு “என்ற தலைப்பில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையால் நான்கு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. அவை உள்ளூர் பெருந்தனக்காரர்களின் சுதந்திரம் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்த வரலாற்றையும், அவர்கள் வாழ்ந்த முறைகளையும், அந்தக் காலத்தின் சமூக பழக்க வழக்கங்களையும் மிக விரிவாக காட்டுகின்றன. உள்ளூர் ராஜாங்கம் எப்படி காலனிய ஆட்சி முறைக்கு கைமாறியது என்பதைக் காட்டும் அரிய பிரதிகள் அவை. எல்லாவற்றையும் சொல்லி விட்டு “ஏதோ பார்த்துச் செய்யுங்கள். நீங்களாக கொடுக்கும் உரிமைகளை ஏற்றுக் கொள்கிறோம் “என்ற தொனியிலேயே உள்ளன அனைத்து பிரதிகளும். எடுத்துக்காட்டாக இரு தாக்கீடுகளின் கடைசிப் பத்திகளைக் கீழே கொடுத்துள்ளேன் அந்தக் காலத்தின் எழுது தமிழுக்கு சிறப்பான எடுத்துக் காட்டுகளாக உள்ளன அவை.

‘‘அந்த பாளைப்பட்டுக்கு உண்டாகிய வகையருப்பு பணமுஞ் சர்க்காருக்கு செலுத்திவிச்சுக் கொண்டு யெங்கள் முன்னோர்கள்சம்பாதிச்ச பூமி தாபிதஞ் செய்திருக்குர பணத்தை நான் யெடுத்து கும்பனியார் கிட்டக் குடுக்குறேன். கும்பனியார் யெடுத்துக் கொண்டு யென்பேரில் தயவு செயிது கொஞ்ச நஞ்சம் குடுத்த மட்டுக்கு வாங்கிக் கொள்ளுகுறேன். நான் மெத்த யெளியவநானபடியிநாலே யென்னைக் காபாட்டி ரெட்சிக்க வேண்டியது.”

“இப்படிக்கி கும்பினியாரவர்களுக்கு தயவு வரும்படி நடந்து கொண்டு யிருக்கிறேன். கும்பினிக் காரியத்தில் மிகவும் கீழ்ப் பணிந்து வணக்கத்துடனே நடந்து கொண்டு அவர்கள் தயவும் அபிமானமும் வர வேணுமென்று பிரார்த்திச்சுக் கொண்டிருக்கிறேன். “

*[அவசரப்பட்டு எழுத்துப்பிழைகளைத் திருத்த வேண்டாம். அவை அந்தப் பிரதியில் உள்ளபடியே இருப்பதுதான் அழகு.]*

பொள்ளாச்சி இலக்கிய வட்டம் சமகால இலக்கியம் குறித்த இலக்கிய நிகழ்வுகளை மாதம் தோறும் சிறப்பாக நடத்தி வருவதோடு, அதன் உறுப்பினர்களின் நூல்களை அவர்களே வெளியிட்டு படைப்பாளிகளை ஊக்குவித்தும் வருகின்றார்கள். 2017 ல் அப்படி வெளியான புன்னகை பூ ஜெயக்குமார் எழுதிய “தூரிகையின் பிஞ்சுப் பாதங்கள் “என்ற கவிதைத் தொகுப்பில் சட்டென்று மனதைக் கவ்விய கவிதையில் ஒன்று...



*காலதாமதமான*  
*பருவ மழையை*  
*வானிக்குள்*  
*சிறை வைக்கிறாள்*  
*வறண்ட பூமிக்காரி.*

இதழ் வடிவமைப்பு: டிலைஸன்ஷாப், 76677 55673.



காணிநிலம் ஆசிரியர் குழுவைச் சார்ந்த ரமணிமுருகேஷ் அவர்கள் எடுத்த நிழற்படத்திற்கு பொருத்தமான கவிதைகள் கேட்ட முகநூல் பதிவில் பின்னூட்டங்களாக இடப்பட்ட கவிதைகளில் சில...

---

தெப்பக்குளத்தினுள்  
கால்கள் நனைக்கும் கோபுரம்  
மீன்களை தரிசிக்க...

**– வ.தெ.சு.கவுதமன்.**

முகங்காட்டும் கண்ணாடியென குளத்து நீர்...  
ரசித்து மகிழும் கன்னியென கல்மண்டபம்...  
இரண்டிற்குமிடையிலான மென்சல்லாபங்களுக்கான தூதுவனாய் காற்று....  
அசைவற்று கவனிக்கின்றது பிரபஞ்சம்...

**– தமிழ்த்தென்றல்.**

கல்லெறிந்து போவீர்களாயின் கடவுள் கலங்குவார்....

**– தீதும் நன்றும்.**

“என்னை நான் குளத்தினில் கண்டேன் ,  
நானோ வெள்ளை, குளம் தான் கலங்கியது  
மனிதனின் செயல்களால் மாசானது குளம்!

**– சத்தியநாராயணன்.**

தன் நிழல் தான் பார்த்து  
மெல்ல நகும் கல்மண்டபம்,

**– ஹரிகரன் வள்ளிநாயகம்.**

கல் மிதக்கும் அதிசயம் கவிதையில் அடங்குமோ  
கனம் தாங்கும் தண்ணீர் யாரும் சிறு கல் எறிந்து  
கலைத்திடுவார்களோ என்று பதைபதைக்கும் மனம்

**– சுந்தரி தில்லை.**

ஆகாயத்தையே பிரதிபலிக்கும் நதி...  
ஆலயத்தைப் பிரதிபலிக்காதா என்ன?

**– கீர்த்தி.**

வெளிச்ச நீரில் விழுந்த பிம்பத்தை நிமிர்த்தி  
வைக்கிறது ஒளியை உட்கொண்ட நிசப்த இரவு.

**– நிலாரவி.**

கோவிலானாலும் குணம் மாறாது அவனுக்கு...  
குளித்துவிட்டு வா சீக்கிரம்,  
கல்லெறியப் போகிறான்- மனிதன்...!

**–செண்பக ஜெகதீசன்...**

நீருக்குள் எழும்பிய ஆலயம் சிறு கல்லெறி  
சலனங்களில் கலைந்தாலும் மீண்டும் நிலைபெற  
தெள்ளத் தெளிந்த நிலையான நீர் தேவை  
ஆராதனைக்கும்...

**– மகாலட்சுமி சுப்பையா .**

அமைதியான உள்ளத்தில் தெளிவு போல...  
அமைதியான குளத்தில் அழகான பிம்பம் போல....  
கோவில்கள் உணர்த்தும் உன்னதம்  
நீரின் தூய்மை உவகையாகச் சேதி சொல்லுதோ...!!

**– தங்கம் வள்ளிநாயகம் .**

விழும் மழைத் துளி  
அசைத்துப் பார்க்கிறது மதிற்சுவரை!

**–சு. கணேஷ்குமார்**

**கவிதைத் தொகுப்பு பரிசாகப் பெறும் கவிதை.**

கோபுரத்து  
தலைஉரசிப்போன  
ஆகாயமேகங்கள் கூட  
தரைதவழும் தண்ணீரில்....

அடைத்து வைக்கப்பட்ட  
விசும்பல்களின் வீச்சென்பது  
அமிழ்ந்து கிடக்கலாம்  
நீர்ச்சுருளின் ஆழத்தில் தானே தவிர  
வாய்ப்பேச்சு வீணர்கள்போல  
கரை நெளியும் நுரைகளில் அல்ல...

வாழ்வாங்கு வாழ்ந்ததெல்லாம்  
வரும் ஒருநாள் காலடிக்கு கீழ் என  
ஆற்றங்கரை மண்டபத் தெப்பம்  
தலைகீழாய்க் கவிழ்ந்து சொல்லும்  
காலம் என்றொரு நாளின்  
“ப்ரவாக” வெள்ளத்தில்.

**– சாயா சுந்தரம்.**